# பொருளடக்கம்



பெரியபுராண விரிவுரையாசிரியரும்,
கோவைத் தமிழ்ச் சங்க அமைச்சரும்,
வழக்கறிஞருமாகிய
திருவாளர் C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள், பி.ஏ.




சிலம்பு-கரு] ஈசுவர—ஆனி [பரல்-கக

## திருஞானசம்பந்த அடிகள் தேவாரம்

### திருவையாறு

ஓதியாரு மறிவாரில்லை யோதியுல கெலாஞ்
சோதியாய் நிறைந்தான் சுடர்ச்சோதியுட் சோதியான்
வேதியாகி விண்ணாகி மண்ணோடெறி காற்றுமா
யாதியாகி நின்றானு மையாறுடை யையனே.

பதவுரை :—

உலகெலாம் சோதியாய் நின்றானும்—(தனது சிறப்பியல்பில்) உலக முழுவதும் விளங்குகிற பேரொளியாய் நிற்கின்றவனும்

சுடர்ச்சோதியுட் சோதியான் (நின்றானும்)—சிவகரணமாய் மாறித் தூய்மையடைந்த ஆன்மாக்களுடைய சிந்தையில் ஒளிரும் ஆன்ம ஒளியோடு விரவிய அருளொளியினுள்ளே விளங்குகிற ஆனந்த ஒளியுடையவனாய் நிற்கின்றவனும்

விண் ஆகி மண்ணோடு எறிகாற்றும் ஆகி நின்றானும்—(பொது இயல் பில்) வான் ஆகியும், மண் ஆகியும், வீசுகின்ற காற்றாகியும் (தீ, நீர் ஆகியும்) நிற்கின்றவனும்

ஆதி ஆகி வேதி ஆகி நின்றானும்—(மேலே கூறப்பட்ட, அஞ்சு பூதங் கள்தோன்றுதற்கும், அப்பூதங்களாகிய உலகம் தோன்றுதற்கும்) நிமித்தகாரணமா யிருத்தலுடன் அவற்றை அறிந்து இயக்கு கின்றவனுமாய் நிற்கின்றவனும்

ஐயாறு உடை ஐயனே—திருவையாற்றிலே திருக்கோயில் கொண் டருளியிருக்கின்ற தலைவனாகிய சிவபெருமானே ஆவர்;

யாரும் ஓதி ஓதி அறிவார் இல்லை—(இங்ஙனம் ஐம்பூதங்களையும் உல கினையுந் தோன்றச்செய்து அவற்றிற்குக் காரணமாய் அவற்றை

அறிவுடன் இயக்குகிறவன் ஆகிய) சிவபெருமானை மக்களெவரும் அருள் நூல்களைப் பலகாலோதினாலும் அறிதல் முடியாது (சாதனங்களை அநுட்டித்து அநுட்டித்தலின் பயனாகத் தங்களுள்ளே உண்டாகிற மெய்யுணர்வினால் மட்டும் உணர முடியும் என்றபடி).

விளக்கவுரை:—

உலகெலாம் சோதியாய் நின்றானும்—ஈண்டு உலகு என்றது சட உலகையும் அறிவுலகையும். சிவபெருமான் உலக முழுவதும் பேரொளியாய் நிறைந்து நிற்கிற ஒளி தூவெளி ஒளி (ஞானாகாச ஒளி)யாகும்; இது சுத்தவெளி ஒளி, வெட்டவெளி ஒளி, சிற்பரவெளி ஒளி, சிதம்பர ஒளி, வியோம ஒளி முதலிய பெயர்களாலும் அருள் நூல்களிற் கூறப்படுகின்றது. இந்தப் பேரொளியானது மலமறைப்பு நீங்கிய அகக்கண்ணுள்ளவர்களுக்கு மட்டும் புலப்படும். மலமறைப்புடைய நம்மனோர்க்குப் புலப்படாது.

"அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்கு
இருட்கண்ணே பாசத்தார்க் கீசன்"

என்ற சிவஞானபோதம் 11-வது சூத்திர வெண்பாவில் இவ்வுண்மை கூறப்பட்டிருக்கிறது. நிற்கின்றானும் என முக்காலத்திலு மொத்தியல நிகழ்காலத்தாற் கூறற்பாலது தெளிவுபற்றி 'நின்றானும்' என இறந்தகாலத்தாற் கூறப்பட்டது.

சுடர்ச்சோதியுட் சோதியான் நின்றானும்—சுடர்ச்சோதி என்பது சுடர் ஆகிய சோதி; இருபெயரொட்டுப் பண்புத்தொகை. சுடர் என்பது ஆன்மசிற்சத்தி ஒளியையும் சோதி என்பது அந்த ஆன்ம சிற்சத்தி ஒளி சிவகரணமாய் மாறித் தூய்மை அடைந்தபொழுது அதனோடு வேறற ஒன்றுபட்டுவிளங்கும் அருட்சத்தியினொளியையும் குறிக்கின்றன. "சாதியா நான்முகனும் சக்கரத்தானுங் காணாச் சோதியாய்சுடராதானார் திருச்சோற்றுத் துறையனாரே" என்று திருச்சோற்றுத்துறை தேவாரம் 9-வது பாட்டில் திருநாவுக்கரசு அடிகள் சுடரையும் சோதியையும் கூறியிருத்தல் நோக்குக. ஒளியிழந்த கண், மாசு நீங்கியவழித் தன்னொளியையும் தன்னொளியுடன் வேறறக்கலந்து நிற்கும் (கதிரவன்) ஒளியையும் ஒருங்கே பெற்றாற்போல மலத்தினால் அருளொளியிழந்த ஆன்மா மல மறைப்பு நீங்கியவழி தனது சிற்சத்தி ஒளியையும் அதற்கு உள்ளொளியாய் விளங்கும் அருட்சத்தியினொளியையும் ஒருங்கே பெறுகின்றது என்பார், சுடர்ச்சோதி என்றார். ஆன்ம சிற்சத்தியினொளியானது அருட்சத்தியினொளியை நோக்க அதனுளடங்குந் தன்மையதான சிறிய ஒளியாயிருத்தலால் அடிகள் அதனைச் சுடர் என்றும் அந்த ஆன்மசிற்சத்தியினொளியைத் தனக்குளடங்கச் செய்யும் அருட்சத்தியினொளி பேரொளியாயிருத்தலால் அதனைச் சோதி என்றும் அடிகள் கூறினார். மாணிக்கவாசக அடிகள்

"பரஞ்சோதி—நவமாய செஞ்சுடர் நல்குதலும்' (238) என்று கூறுதல்காண்க. ஆன்மசிற்சத்தி ஒளியும் அருட்சத்தி ஒளியும் ஒன்றென்னும்படி வேறறக்கலந்து நிற்றலால் 'சுடர்ச் சோதி' என்றார். சோதியான் என்பது அருளொளிக்கு உள்ளொளியாய் விளங்குகின்ற இன்ப ஒளியுடைய சிவபெருமானைக் குறிக்கின்றது "சுடரிழந்த—துங்கவிழிச்சோதியு முட்சோதியும் பெற்றாற்போல்—சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே" என்று சிவஞானசித்தியார் 8-வது சூத்திரம் 38-வது பாட்டு ஈற்று அடிகள் கூறுதல் காண்க.

நின்றானும் என்ற வினைமுற்றுச் சொல்லை 'சோதியான்' என்ற சொல்லின்பின் சேர்க்க.

விண் ஆகி மண்ணோடு எரிகாற்றுமாகி நின்றானும்—இனம்பற்றி இதில் கூறப்படாமலிருக்கிற தீ, நீர், பூதங்களும் சேர்த்து உரை கூறப்பட்டது.

ஆதி ஆகி வேதி ஆகி நின்றானும்—ஆதி என்பது காரணம். பூதங்களுக்கும் பூதங்களாலாகிய உலகிற்கும் ஆதி என்றதனால் சிவபெருமான் உலகிற்கு நிமித்தகாரணனாயுள்ளான் என்பது கூறப்பட்டது. வேதி=அறிவு. வேதியாகி என்றதனால் அவன் பூதங்களால் உலகிற்கு ஆவன அறிந்து அவற்றை இயக்குகின்றான் என்பதும் அறிவுலகினை அறிவித்து இயக்குகின்றான் என்பதும் கூறப்பட்டன. இவை மண்ணிற் றிண்மைவைத்தல் நீரில் இன் சுவைவைத்தல், தீயில் வெம்மைசெய்தல் முதலியவை.

ஐயாறு உடை ஐயனே—ஐயன்—தலைவன் இங்ஙனம் சிவபெருமான் நிற்றல் உலகினைக் காக்கும் தலைமைபற்றி என்பார் ஐயாறு உடைய ஐயன் என்றார். ஏ-தேற்றம். அசை எனினும் பொருந்தும்.

யாரும் ஓதி ஓதி அறிவார் இல்லை—எத்துணை ஒருவர் ஓதினாலும் அவர் அவ்வோதுதல்பற்றிச் சிவபெருமானது சிறப்பியலை அறிய முடியாது என்பார். "யாரும் ஓதி ஓதி அறிவாரில்லை" என்றார். இல்லை என்பது மாட்டாமையைக் குறிக்கிறது. ஓதி ஓதி என்பது பலகாலோதுதலைக் குறிக்கிறது. இப்பாட்டில் ஓதியாரு மறிவாரில்லை என்ற பகுதியில் அறிவார் எழுவாய், இல்லை பயனிலை. ஏனைப்பகுதிகளில் பதவுரையிற் கண்டபடி நான்கு எழுவாய்கள், ஐயன் என்ற பயனிலையைக்கொண்டு முடிகின்றன.

"ஓதியே கழிக்கின்றீர்க ளுலகத்தீ ரொருவன் றன்னை
நீதியால் நினையமாட்டீர் நின்மல னென்றுசொல்லீர்"

என்று திருநாவுக்கரசு அடிகள் திருச்சோற்றுத்துறைத் தேவாரம் 9-வது பாட்டில் இக்கருத்தைக் கூறுதல் காண்க.

ஆன்மாக்கள் சிவபெருமானது சிறப்பியலை அவன் அருளொளியோடு அத்துவிதமாய்க் கலந்துநின்று அவனைத் தம்முள்ளே உணர வேண்டுமே அன்றி ஓதி அறிதல் முடியாது என்று அடிகள் கூறினர்.

சென்ற சித்திரைத்திங்கள் செந்தமிழ்ச் செல்வி கூ-ஆம் பரலில் உரை கூறப்பட்ட "செற்றதோர்மனமொழிந்து" என்ற முதற்குறிப்புத் தேவாரத்தில் மூன்று ஒளிகள் கூறப்பட்டிருத்தல்போல இந்தத் தேவாரத்திலும் உலகெலாஞ் சோதியாய் நிறைந்தான் என்றதனுல் தூவெளி ஒளியும் சுடர்ச்சோதியுள் என்றதனுல் ஆன்ம சிற்சத்தியினுளிக்கு உள்ளொளியாக விளங்கும் அருட்சத்தியின் ஒளியும் சோதியான் என்றதனுல் சிவபெருமானுடைய ஆனந்த ஒளியும் கூறப்பட்டிருத்தலை நோக்கி உண்மை அறிக.

இம் மூவொளிகளில் தூவெளி ஒளிக்குள் பாசமும், அருள் ஒளிக்குள் பாசமும் பசுவும், ஆநந்த ஒளிக்குள் பாசமும் பசுவும் அருளும் முத்திகாலத்தில் ஒடுங்குவன ஆகும்.

—மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

## திங்கள்

வானநூலளவைப்படி வரையறுத்துக் காணப்பட்டிருந்த வழிநிலையிலிருந்து திங்கள் விலகிச்செல்கிறதென்று கிரீனிச்சிலிருக்கும் அரசாங்க வானநூற் பேரறிஞர் டாக்டர். எச். ஸ்பென்ஸர் ஜோன்ஸ் கூறுகின்றார்.

# வரலாற்றுப் பகுதி: History & Biography

## உவில்லியம் மர்டாக் (William Murdock)

[திரு. N. குழந்தைவேலன் அவர்கள் B. A.]

உவில்லியம் மர்டாக் என்னும் பேரறிஞர் காஸ் விளக்கு (gas light) என்னும் ஆவி விளக்கைக் கண்டுபிடித்தவர். இவர் 1754-ஆம் ஆண்டில் ஸ்காட்லண்டு (Scotland) நாட்டில் ஓர் ஏழைக் குடியானவன் வீட்டிற் பிறந்தார். இவர் இளமையில் மாடு மேய்ப்பது வழக்கம். சிறு வயதிலேயே இவருக்குப் புதிய கருவிகள் அமைப்பதில் மிகுந்த விருப்பம் உண்டு. இவர் மாடு மேய்க்கும் இடத்திற்கு அருகிலிருந்த ஒரு குகையில் எந்நேரமும் புதிய விளையாட்டுக் கருவிகள் செய்துகொண்டிருப்பார். இவர் மரத்தினுள் பொறிகளை யமைத்து ஒரு குதிரை செய்தார். அஃது அசைந்து ஓடுவது கண்டு சுற்றுப்புறங்களிலுள்ள மக்கள் வியப்புற்றனர்.

மர்டாக்கின் தந்தையார் ஒரு பொறிச்சாலையில் (இயந்திர சாலையில்) வேலைபார்த்து வந்தார். இவர்தம் தந்தையாருக்கு உதவியாகச் சிற்சில வேளைகளில் இவர் அப்பொறியினைச் செலுத்துவதுண்டு. ஜேம்ஸ் உவாட் (James Watt) என்னும் பேரறிஞரைப்பற்றியும் அவர் நீராவியின் ஆற்றலைக் கண்டுபிடித்ததைப்பற்றியும் இவர் அடிக்கடி கேள்வியுற்றிருந்தார். பர்மிங்காம் (Birmingham) நகரில் ஜேம்ஸ் அமைத்திருந்த புகழ்பெற்ற தொழிற்சாலையில் தாம் எவ்வாறாயினும் வேலை பெறவேண்டுமென இவர் உறுதி செய்துகொண்டார். அங்ஙனமே ஒருநாள் மர்டாக் தம் வீட்டை விட்டகன்று அத் தொழிற்சாலையை அடைந்தார். ஜேம்ஸ் அவ்வமயம் அங்கு இல்லை. அவரது கூட்டாளியான போல்ட்டன் (Boulton) மட்டும் இருந்தார். மர்டாக் அவரிடம் சென்று தம்மை வேலைக்கு அமர்த்திக்கொள்ளுமாறு வேண்டினார். போல்ட்டன் மர்டாக்கின் தொப்பி புது மாதிரியாகச் சாயம் ஏற்றி இருந்தது கண்டு அத்தொப்பி எதனால் செய்யப்பட்டதென வினவினார். மர்டாக் அது மரத்தால் செய்யப்பட்டதென்றும் அதைத் தாமாகவே புதிய முறையிற் செய்ததாயும் கூறினார். போல்ட்டன் இவர்தம் அறிவு நுட்பத்தைக் கண்டு வியந்து உடனே தொழிற்சாலையில் வேலைக்கு அமர்த்திக்கொண்டார்.

மர்டாக் தம்முடன் வேலை பார்த்து வந்த ஏனைய தொழிலாளர்களைக் காட்டிலும் சுறுசுறுப்பிலும் திறமையிலும் தலைசிறந்து விளங்கினர். இவரது விடாமுயற்சியின் பயனாய் அத்தொழிற்சாலை பல துறைகளிலும் முன்னேற்றமடைந்தது. இவர் நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கமுடையவராதலின் தமது ஆராய்ச்சியால் விளைந்த பெருமைகள் அனைத்தையும் இவர் தம் முதலாளிகளுக்கே விட்டுவிட்டார். முதலாளிகளும் மனமுவந்து இவரைக் கார்ன்வால் (Cornwall) என்னுமிடத்திலுள்ள சுரங்கப் பொறிகளின் மேற்பார்வையாளராக நியமித்துப் பெருமைப்படுத்தினர்.

மர்டாக் தமது ஓய்வு நேரங்களைப் புதிய கருவிகள் கண்டுபிடிப்பதில் செலவழித்து வந்தார். நிலக்கரியை எரிப்பதால் உண்டாகும் ஆவியை (gas) எவ்வாறு பயன்படுத்தலாமென இவர் அல்லும் பகலும் ஆராய்ச்சி செய்து வந்தார். மர்டாக் ஓர் ஏனத்தில் நிலக்கரியை வைத்துக் காய்ச்சி அதினின்றும் வரும் கரிவளியை ஒரு பெரிய கொப்பரையில் நிரப்பினர். மீண்டும் அதனைக் கொப்பரையிலிருந்து ஒரு சிறு குழாயின் வழிச் செலுத்தியபோது அக்குழாயின் முனையிலுள்ள சிறு கண்களின் வாயிலாக ஆவி வெளிக்கிளம்பிற்று. இம்முனையில் தீப்பொறியைக் காட்டியவுடன் ஆவி மிகுந்த ஒளியுடன் எரியத் துவங்கிற்று. இதுவே மர்டாக்கினல் 1794-ஆம் ஆண்டில் முதன்முதலாகக் கண்டுபிடிக்கப் பெற்ற ஆவி (காஸ்) விளக்கு (gas light) ஆகும்.

மர்டாக் தமது வீடு முழுவதும் குழாய்கள் அமைத்து அவற்றின் வழியாய்க் கரிவளியைச் செலுத்தி வீட்டின் எல்லா அறைகளிலும் ஆவி (காஸ்) விளக்கு வேண்டும்போது எரியும்படி செய்தார். இவ்வியத்தகு செயலைக் காண ஆயிரக்கணக்கான மக்கள் வந்து கூடினர். இதுவுமன்றி இவர் இரவில் வெளிச் செல்கையில் கையிற் கொண்டுபோக ஆவி விளக்கு ஒன்று செய்தார். சின்னட் கழித்து இவர் பர்மிங்காம் நகருக்குத் திரும்பிச் சென்றூர். ஆங்கு இவரது முதலாளிகளின் வீடுகளையும் ஆவி விளக்குகளால் ஒப்பனை செய்தார். 1802-ஆம் ஆண்டில் இங்கிலாந்தும் பிரான்சும் ஒற்றுமைப்பட்டபோது அவ்விழாவைக் கொண்டாடுவதற்கு எங்கே பார்த்தாலும் ஆவி விளக்குகள் போடப்பட்டன. மக்கள் அவற்றை வாணவேடிக்கைகள் போன்று கண்டு களித்தனர். மர்டாக்கின் முதலாளிகள் அவரது திறமையைப் போற்றிப் புகழ்ந்து, தங்கள் தொழிற்சாலையிலும் ஆவி விளக்குகள் அமைக்குமாறு ஏற்பாடு செய்தனர். காஸ் விளக்கு என்னும் ஆவி விளக்கு

மிக்க அழகாயும், ஒளி மிகுந்ததாயும், மாசற்றதாயும் இருந்ததால் அஃது எங்கே பார்த்தாலும் விரைவாகப் பரவலாயிற்று.

ஆயினும் தெருக்களில் ஆவி விளக்குகள் போடுவதற்கு மக்கள் உடன்படவில்லை. சிறந்த அறிவாளிகளும் கூட வெளிச்சத்தைத் தெருக்களில் குழாய் மூலம் எவ்வாறு அனுப்ப முடியும் எனக் கூறி ஏளனம் செய்தனர். மற்றும் சிலர் மர்டாக் கதிரவனையும் திங்களையும் செதுக்கிக் குழாயில் அடைத்துவைக்க முயல்கின்றனரென நகையாடினர். மர்டாக் சிறிதும் ஊக்கம் குன்றாது வருந்தியுழைத்து 1814-ஆம் ஆண்டில் வெஸ்ட்மினிஸ்ட்டர் (Westminster) பாலத்தின் மேல் காஸ் விளக்குகளை எரியச் செய்தார். குழாயினுள் தீயை அடைத்து வைத்திருப்பதாகவும், அதைத் திறந்தவுடன் அத் தீ வெளிக் கிளம்புவதாகவும் மக்கள் எண்ணி இருந்தனர். இதன்பின் ஆங்கிலப் பாராளுமன்றத்திலும் (Parliament) காஸ் விளக்குகள் அமைக்கப்பெற்றன. அங்கு முதன் முதலாகக் காஸ் விளக்குப் போடுகையில் குழாய்களைச் சுவரோரங்களில் வைக்கக் கூடாதென்றும், அதனால் கட்டிடம் ஒருவேளை தீப்பிடிக்க நேரிடும் என்றும் பலர் வழக்காடினர். மன்றத்தின் உறுப்பினர்கள் காஸ் விளக்குக் குழாய்கள் மிகுந்த சூட்டோடு இருக்குமெனவெண்ணித் தம் கைகளில் தோல் மூடிகள் (gloves) அணிந்து அவற்றை மெள்ளத் தொட்டுப் பார்த்தனர் என்றும் அவை மிகவும் குளிர்ந்திருந்தது கண்டு இறும்பூதெய்தினரென்றும் கூறப்படுகின்றன.

நாளடைவில் வெஸ்ட்மினிஸ்ட்டர் நகரின் தெருக்களிலெல்லாம் காஸ் விளக்குகள் போடப்பட்டன. விளக்கு ஏற்றும் இப்புதுமையைக் காண மாலை நேரங்களில் மக்கள் திரள் திரளாய்ச் சென்றனர். விளக்கு ஏற்றுபவர்களின் பின்னால் மக்கள் கூடிச் சென்று வேடிக்கை பார்க்கும் ஆவலினால் அவர்களது வேலைக்கு இடையூறு செய்தனர். இதனால் அவ் வேலைக்காரர் பலர் வேலை நிறுத்தம் செய்யும்படி நேர்ந்தது. சில ஆண்டுகளில் காஸ் விளக்குகள் எல்லா நகரங்களிலும் பரவலாயின. மர்டாக்கினால் கண்டுபிடிக்கப் பெற்ற காஸ் விளக்கு தற்காலத்தில் மிகச் சிறந்த முறையில் திருத்தியமைக்கப்பட்டிருக்கிறது. எரியும் கரிவளியை ஒரு வகைத் திரியில் (Mantle) பாயச் செய்தால் அது மிகுந்த வெண்மையான பெரிய ஒளியை உண்டாக்குகின்றது. இவ்வொளி நூற்றுக்கணக்கான மெழுகுவத்தி விளக்குகள் ஒன்றாய் எரிவதனால் உண்டாகும் ஒளிக்கு ஒப்பாக இருக்கிறது. இதனாற்

றுன் இக்காலத்தில் மின்சார விளக்கு வந்த பிறகும் கூட ஆவி விளக்கு மிகுதியாகப் பயன்படுகிறது.

மர்டாக் தாம் கண்டுபிடித்த இவ்வியப்பான விளக்கைத் தமக்கே உரிமையாக்கிக் கொண்டிருந்தால் கோடிக்கணக்கான பொருள் சேர்த்திருக்கலாம். "இவர்யாம்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் பரந்த நோக்குடையவராக வின் காஸ் விளக்கு மக்களனைவர்க்கும் பயன்படுமாறு உவந்து அளித்துவிட்டனர். மக்கள் பல்வேறு இடங்களில் காஸ் விளக்குக் கடைகள் வைத்துத் திரண்டபொருள் ஈட்டினர். பேரறிவாளரான மர்டாக்கின் செல்வம் ஊருணி நீர் நிறைந்தாற் போன்று உலகிற்கு எளிதிற் பயன்படுவதாயிற்று. இவர் பர்மிங்காம் தொழிற்சாலையிலேயே நீண்டகாலம் தொண்டு ஆற்றி 1839-ஆம் ஆண்டில் தாம் கண்டறிந்த ஒளியிற் கலந்தனர்.

---

அமெரிக்க அகத்தியர்

## கிறீன் வைத்தியர். (Dr. Samuel Fish Green)

[வேள்ளவத்தை திரு. குல. சபாநாதன் அவர்கள்]

செந்தமிழ்ச் செல்வி சிலம்பு கரு பரல் கூ-ல் மயிலை. சீனி வேங்கடசாமி அவர்கள் கிறீன் வைத்தியரைப்பற்றி யெழுதிய வரலாறு நன்கு யிருக்கின்றது. இந்தியாவிலுள்ள வரலாற்றாராய்ச்சி வல்லுநர் ஈழமண்டலத்தில் வைத்தியத் தொண்டுடன் தமிழ்த் தொண்டும் ஆற்றிய அறிஞரைப்பற்றிய குறிப்புக்களை அரிதின் முயன்று சேர்த்தெழுதியதனை யாம் பாராட்டாதிருக்க முடியாதன்றோ? சாமி அவர்கட்குத் தமிழகம் மிகவும் கடமைப்பட்டுளதென்பது கூறுதே யமையும். "கிறிஸ்தவமும் தமிழும்" எனும் புதியதோர் துறையில் தமிழின் சிறப்பை யெடுத்துரைக்கும் இவ்வறிஞர்க்கு எமது நன்றியுரியதாக. இவ்வறிஞரும் வைத்தியர் அவர்களின் வரலாற்றை முற்றுக எழுதாது விட்டமையானும், இவரியற்றிய சில நூல்களின் பெயரே தமக்குத் தெரியவில்லையெனக் குறிப்பிட்டமையானும், "ஈழமண்டலப் புலவர் வரலாறு" எனும் நூலுக்கு யாம் ஈட்டிய குறிப்புக்களி னுதவியொடு ஒருவாறு எழுத முயல்கின்றும்.

இற்றைக்கு ஏறக்குறைய நூறு ஆண்டுகட்கு முன்னரே அமெரிக்க இலங்கை மிஷன் தமிழிலும் ஆங்கிலத்திலும் அரும்

பெரும் நூல்களை வெளியிட்டுத் தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிந் துளதென்பது யாவராலும் மறுக்க முடியாததோ ருண்மையாகும். இத்தகைய தொண்டினை ஈழத்து மக்களே மறந்துவிட்டன ரெனின், இந்தியாவிலுள்ளார் இதனை யறியா திருத்தலில் வியப்பொன்றுமில்லை. அமெரிக்க இலங்கை மிஷன் வெளியிட்ட நூல்களை ஈழத்து மக்கள் ஓரிடத்து ஈட்டிவைத் திருப்பின் இற்றை ஞான்று அவை யாவும் விலைமதித்தற் கரிய பெரு நிதியாகவும், மிஷனின் தொண்டினை இற்றைப் பொழுதிலும் நினைவூட்டுங் கருவியாகவும் விளங்கும். வைத்திய மிஷனரியாக அமெரிக்காவிலிருந்து இலங்கைக்கு வந்த கிறீன்* ஐயர் அவர்களின் வரலாற்றை யறிதல், வைத்தியத் துறையில் தமிழின் வளர்ச்சியை யறிதலாகு மாதலின், தமிழகத்திற்குப் பயன்படுமாறு 'செல்வி' வாயிலாகக் குறிப்பிட விரும்புகின்றும்.

இவர் ஊர் கிறீன் குன்றம். தந்தையார் பெயர் உவில்லியம் எலிசா கிறீன்; தாயார்—ஜீலியா பிளிம்ரன். கி. பி. 1822ம் ஆண்டு ஐப்பசித் திங்கள் 10ம் நாட் பிறந்தவர். சிறிது காலம் எழுத்தாளராக வேலை கொண்டமர்ந் திருந்தாரேனும் அவரது உளம் வைத்தியத்தையே நாடி நின்றது. அங்ஙனமே இவருடைய கருத்து நிறைவேறி வைத்திய மாணவனுகி 1845ம் ஆண்டு வைத்தியப் பட்டம் பெற்ருர். அடுத்த வாண்டில் பல மிஷனரிமார் இந்தியாவுக்குத் தொண்டாற்றும் நோக்குடன் செல்லவிருப்பதை யறிந்து தாமும் அப்பணியில் ஈடுபட விரும்பி அமெரிக்க கழகத்திற்குத் தெரிவித்தார். கழகம் இவரை இலங்கைக்கு வைத்திய மிஷனரியாக அனுப்பத் தீர்மானித்தது. இதனைக் கேள்வியுற்ற ஐயர் மிக மகிழ்வுற்று, இந்தியாவிலிருந்து மீண்ட ஒரு மிஷனரியிடம் தமிழ் கற்கத் தொடங்கிவிட்டார். முன்னரே இலத்தீன், பிரென்ச், கிரீக், ஜேர்மன் முதலிய மொழிகளைக் கற்றுள்ளார். கப்பலிலும் தமிழைக் கற்பதில் அதிக நேரம் மிக்க ஊக்கமெடுத்து வருவார். 1847ம் ஆண்டு சித்திரைத் திங்கள் 20ம் நாள் புறப்பட்டு புரட்டாசித் திங்கள் 20ம் நாள் இலங்கை வந்து சேர்ந்தார். வந்தும் தமிழ் கற்பதில் ஊக்கமுடையராகி எட்டுத் திங்களுள் யாவர் தமிழிற் கூறினும் விளங்கிக்கொள்ளும் ஆற்றலுடையராயினர். வட்டுக்கோட்டையில் செமினரியோடு (Vaddukoddai Seminary) அமைக்கப்பட்ட வைத்தியசாலையிற் சிறிது காலமிருந்தார். பின்னர் 1848-ஆம் ஆண்டு மிஷனில் நடந்தேறிய தீர்மானப்படி

*[மேனுட்டுக் கிறிஸ்தவ மிஷனரிமாரை "ஐயர்" என இலங்கையில் அழைப்பது வழக்கம்.]

இவ்வைத்தியசாலை மானிப்பாயில் நிறுவப்பட்டது. அதற்கு ஐயர் அவர்களே தலைவராக விருந்தார். வைத்திய சாலையிலிருக்கும்பொழுது அங்கு வரும் நோயாளிகளுடன் தமிழில் உரையாடத் தொடங்கிய சிறிது காலத்திற்குள் சமயபோதனை செய்யக்கூடிய தமிழறிவைப் பெற்றுவிட்டார். சத்திர வைத்தியத்தில் மிகவுங் கைதேர்ந்தவராதலின், இவரது புகழ் ஈழ மண்டலம் முற்றும் விரைவிற் பரவிற்று. 1859-ஆம் ஆண்டு இவரால் வைத்தியஞ் செய்யப்பட்டோர் தொகை 2217 எனின், இவருடைய வைத்தியச் சிறப்பினை யெடுத்தியம்பவும் வேண்டுமோ? ஐயர் அவர்கள் தமிழில் நன்கு உரையாடப் பழகிய தோடமைவுறாது தமிழ்ப் பழமொழிகளை அடிக்கடி உரிய விடங்களில் ஆளுவதில் தமிழர்களினும் ஆற்றல் மிக்குடையராயினர். புதிய சொற்கள், வைத்தியச் சொற்கள், முதலியவற்றைக் குறித்துக் கொள்வது இவருடைய வழக்கம்.

ஐயர் அவர்கள் தாமாக வைத்தியஞ் செய்துவந்ததோடு மாணவர்களைச் சேர்த்து வைத்திய முறைகளைக் கற்பித்தும் வந்தார்கள். அங்காதி பாதம், சத்திர வைத்தியம், மருத்துவம் முதலிய பகுதிகளில் அவர்களை நன்கு பயிற்றுவித்து, யாவரும் தமது மாணவர்களில் நம்பிக்கைவைத்து வைத்தியஞ் செய்விக்கும் தகுதிவாய்ந்தவர்களாக்கிவிட்டார். இலங்கையில் அக்காலத்தில் வைத்திய கல்லூரியின்மையால் ஐயர் அவர்களிடம் கற்றவர்களே வைத்தியர்களாகத் தெரிந்தெடுக்கப்பட்டார்கள். ஐயர் அவர்களே மேனாட்டு முறையை இலங்கையில் விளக்கமுறச் செய்தவரும், வைத்திய கல்லூரியின்பாற்பட்ட தொன்றை முதன்முதல் நிறுவியவருமாவர். ஐயர் அவர்களின் வேண்டுகோட்படி, இவருடைய மாணவருள் ஒருவராய டான்வோத் பெரியதம்பி யவர்கட்கு அமெரிக்க வைத்திய கல்லூரி எம். டி. (M. D.) பட்டத்தை யளித்துப் பெருமைப்படுத்தியதெனின், ஐயர் அவர்களிடம் கற்ற மாணவர்களின் தகைமை வெள்ளிடைமலை. ஐயர் அவர்கள் தம் மாணவர்கட்கு வைத்திய முறைகளை முதலில் ஆங்கில மொழியிற் படிப்பித்து வந்தார். அம்முறைகளைத் தாய்மொழியிற் கற்பித்தால் இலகுவில் விளங்கிக் கொள்வார்களென் றெண்ணித் தமிழில் படிப்பிக்க முயன்றார். முயன்றபொழுது அவற்றிற்கேற்ற நூல்கள் தமிழில் இல்லாப் பெருங்குறையை யுணர்ந்தார். இம்மாணவர் பொருட்டு வைத்திய நூல்களுட் சிலவற்றைத் தமிழில் மொழி பெயர்க்கத் தொடங்கினார்கள்.

ஐயர் அவர்கள் அங்காதிபாத சுகரணவாத உற்பாலன நூலை மொழி பெயர்த்து அதனை யச்சிடுஞ் செலவை இலங்கைப்

யரசினரைத் தரும்படி 1856-ல் வேண்டுதல் செய்தபொழுது, ஆங்கிலந் தவிர்ந்த ஏனைய மொழிகளில் வெளியிடும் நூல்களுக்கு ஆதரவளித்தல் இலங்கைத் தேசாதிபதியவர்களின் கொள்கைக்கு முற்றும் முரணுகுமென அரசினர் விடையிறுத்தனர். ஐயர் அவர்கள் இத்தகைய விடையினை எதிர்பார்த்திருந்தவராதலின், தமது நூலைச் சென்னையில் அச்சிட ஒழுங்கு செய்தார். அடுத்த வாண்டிற்றுனே இந்நூல் பல படங்களுடன் வெளிவந்தது.

ஐயர் அவர்கள் தம்மிடம் முன்பு கற்ற சில மாணவர்களையும் நூல்கள் மொழி பெயர்த்தற்கு உதவியாகக் கொண்டனர். திரு. சாப்மன், டான்வோத், எவட்ஸ் முதலிய மாணவர் மிக்கவுதவி புரிந்தனர். சில சமயங்களில் இவர்கள் மொழி பெயர்த்தனவற்றை மீட்டும் வேறு வகையாகத் தாம் மொழிபெயர்த்து அச்சிட்டாலும் தமது மாணவர்களின் பெயரையே மொழி பெயர்ப்பாளராகக் குறிப்பிட்டுத் தாம் மேற்பார்வை செய்ததாக மட்டும் குறிப்பிடும் வழக்க முடையவர். இதனுல் மொழி பெயர்த்தலில் மாணவர்கட்கும் ஊக்கமுண்டாக்கி வந்தனர்.

ஐயர் அவர்கள் ஒரு நூலை மொழிபெயர்க்குமுன் அதன் கணுள்ள கடினமான சொற்களைத் தெரிந்தெடுத்து அவற்றிற்கு ஏற்ற தமிழ்ச் சொற்களைத் தமது மாணவர்களுடன் நன்காராய்ந்து குறித்துக் கொள்வர். பின்னர் இச்சொற்களை அகர வரிசைப்படுத்தித் தொகுத்து அவற்றிற்கேற்ற ஆங்கிலச் சொற்களையும் எழுதி ஒவ்வொரு நூலுக்கும் ஒவ்வோரகராதி தொகுத்து வைத்துக் கொள்வர். இங்ஙனம் தொகுத்து நூல் முற்றினையும் மொழி பெயர்த்த பின்னர் சிறந்த சொற்கள் அகப்படின், வேண்டிய விடங்களில் இவற்றையே பயன்படுத்துவர். அகராதி ஒவ்வொரு நூலுக்கும் தொகுத்து வந்ததன் நோக்கம் பின்னர் "தமிழ்—ஆங்கில வைத்திய அகராதி" யெனும் பெயருடன் மிக விரிவான ஓர் வைத்திய அகராதியினை வெளியிட வேண்டு மென்பதேயாம். இங்ஙனம் மேனுட்டு வைத்திய முறைகளைத் தமிழுக்களித்த வள்ளலை யாம் அகத்திய முனிவரின் அவதாரமெனவே பாராட்டல் வேண்டும்.

ஐயர் அவர்கள் தம்மிடம் கற்ற மாணவர்கள் வைத்தியர்களாக ஊருக்குட் புறப்படும் பொழுது கூறும் அறிவுரை மூன்று. அவையிற்றை இக்கால வைத்தியரும் உளத்திற் பதிக்குமாறு குறிப்பிடுகின்றும். (1) கற்றலை நிறுத்தாதே. (2) நல்லொழுக்க முடையவனுயிரு (3) உனது மதத்தைக் கைவிடாதே.

இந்தியாவிற்றம் புகழ் நிறுவிய டாக்டர் மேடொக் அவர்கள் கிறீன் ஐயரின் உதவியைக் கொண்டே கலைநூல்கள் பலவற்றைத் தமிழில் வெளியிட்டனர். வைத்தியச் சொற்களைப் பற்றியறிய விரும்பின் ஐயர் அவர்கட்கே எழுதுவார். மொழிபெயர்ப்பாளர் அறிந்து கொள்ளவேண்டிய பல கருத்துக்கள் இவ்விருவரும் எழுதிய கடிதங்களில் பொதிந்திருக்கின்றன. டாக்டர் அவர்கள் எழுதிய கடிதமொன்றில், "பிற்காலத்தவர் இத்துறையில் நீங்கள் செய்த பெருந்தொண்டின் பயனையனுபவிப்பார்கள். கலைச்சொல்லாக்கம் இன்பந்தருவதன்றெனினும் முக்கியமான தொன்றாம்" எனவும்.

"தங்கள் நூல்களில், யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவரும் பெரும்பாலான நூற்களிற் காணப்படும் கடினமான நடை, இல்லாதிருத்தல் மகிழ்ச்சிக்குரியதே. சிற்சில விடங்களிற் காணப்படும் கடினமான சொற்களையும் எளிதான சொற்களாக மாற்ற முயலுமாறு வேண்டுகின்றேன்" எனவும் ஐயர் அவர்களின் தொண்டைப் பலபடப் புகழ்ந்து பாராட்டியுள்ளார்.

1854-ம் ஆண்டிலும் அடுத்தவாண்டிலும் யாழ்ப்பாணத்திலே கொடிய பேதி நோய் பரவிற்று. மக்கள் பட்ட பெருந்துன்பத்திற்களவில்லை. சில இல்லங்களில் இறந்தவர்களையெடுத்துச் செல்லவே ஆட்களில்லாதொழிந்தனர். இக்கொடிய நோய் பரவி யாழ்ப்பாணம் முற்றும் துன்பக்கடலுள் ஆழ்ந்துகிடந்த பொழுது ஐயர் அவர்கள் தனது உயிரைப் பெரிதென மதியாது பல்லாற்றானும் உதவிபுரிய முன்வந்தார். அக்காலத்திற்றான் இவருடைய வீரமும் வைத்தியத்தொண்டும் ஒருங்கு மிளிர்ந்தன. நோயணுகாது தப்பித்துக்கொள்ளும் முறைகளையும், நோய்வாய்ப்பட்டார் சுகமடைவதற்குரிய முறைகளையும், "பிராணோபகாரி" யெனும் நூலில் விரிவாகக் கூறி, அதன்பிரதிகளை யாவருக்கும் வழங்கினர். அரசாட்சியினரும் இவ்வீரரைக் கொண்டே துண்டுப் பத்திரங்கள் வெளியிட்டு நோயைத்தடுக்க முயற்சித்தனர். அக்காலத்தில் வடமாகாணத்து ஏசண்டாய் (Government Agent) இருந்த டைக் (Dyke) துரையவர்கள் ஐயர் அவர்களின் பெருந்தொண்டினையும்வைத்தியத்தினையும் நன்கு பாராட்டினார்கள். அரசினரும் இவ்வேசண்டு வாயிலாக ஐயர் அவர்கட்கு ஆண்டுதோறும் 1000 ரூபா நன்கொடையளித்து வந்தனர். சிலவாண்டுகட்குப் பின்னர் 2000 ரூபா அளித்து வந்தனர்.

* 1855, 1856-ஆம் ஆண்டென்பர் சில யாழ்ப்பாணச் சரித்திராசிரியர்.

ஐயர் அவர்கள் 1875ம் ஆண்டு ஐப்பசித் திங்கள் ரு-ம் நாள் அமெரிக்கதேயஞ் சென்று நாலாண்டுவரை தங்கினர். 1862ம் ஆண்டு வைகாசி உ௨ம் நாள் மாகிறற் என்னும் நங்கையை மணமுடித்து அத்திங்கள் உ௬-ம் நாளன்று மீட்டும் யாழ்ப்பாணத்திற்குப் புறப்பட்டு ஐப்பசி க௬-ம் நாள் வந்து சேர்ந்தார். ஐயர் அவர்கள் தம் இல்லக்கிழத்தியுடன் யாழ்ப்பாணம் வந்தபொழுது ஊரவர்கள் மகிழ்வுற்று அவர்களிருவரையும் சிறப்பாக வரவேற்றார்கள். மீட்டும் வைத்தியத்தொழிலிலும் மாணவர்களைப் பயிற்றுவதிலும் ஐயர் அவர்கள் ஈடுபட்டார்கள். அக்காலத்திலிருந்த ஏசண்டரின் வேண்டுகோட்கிணங்கித் தமது வேலையுடன் ஆபத்துக்குதவிச் சங்கவைத்திய சாலைமேற்பார்வையாளராகவும் கடமை புரிந்துவந்தார். ஐயர் அவர்கள் மீட்டும் 1873-ம் ஆண்டு பங்குனி உ௬-ம் நாள் அமெரிக்காவுக்குச் சென்று பின்னர் வாராதிருக்கநேரிட்டது. ஐயர் அவர்கள் மீட்டும்வந்து தொண்டாற்றவிரும்பியும், அவருடைய உடம்பு நிலையைக்குறித்து மீட்டும் அனுப்புதல் நன்றன்று என அமெரிக்கக் கழகம் தீர்மானித்தது. இங்ஙனம் தடுக்கப்பட்டபொழுதும் மாணவர்கள் மொழிபெயர்த்த நூல்களைத் திருத்தியனுப்பவதில் தமது காலத்தைப் போக்கிவந்தனர், இன்னும் கண், கால், வாய், கை, கால், தோல், உடம்பு முதலியவற்றைப்பற்றிச் சிறுதுண்டுத் தாள்கள் வெளியிட்டு இலங்கையிற் பலரும் படித்துப் பயனடையுமாறு பரப்புதற்கு ஒழுங்கு செய்தார். இங்ஙனம் இலங்கையில் இல்லாதகாலத்தும் அவ்வூர்த் தமிழர்கட்குப் பிறிதொருவழியில் அமெரிக்காவிலிருந்தே தொண்டுபுரிந்துவந்த ஐயர் அவர்கள் இவ்வுலகவாழ்வை நீத்து இறைவனடிசேர்ந்தசெய்தி 1884-ம் ஆண்டு வைகாசித் திங்கள் உ௮-ம் நாளன்று ஈழமண்டலம் முற்றும் காட்டுத்தீபோற் பரவி யாவரையும் துன்பக்கடலுள் ஆழ்த்தியது. ஐயர் அவர்கள் சிலருக்குச்செய்த நுட்பமான சத்திரவைத்தியத்தையொட்டிய கதைகள் பலவற்றை இன்னும் யாழ்ப்பாணத்து முதியோர் பலரிடம் கேட்டுமகிழலாம்.

நூல்கள் :—

ஐயர் அவர்கள் வெளியிட்ட நூல்களைப்பற்றிய குறிப்புக்களை எமது நண்பரும் வட்டுக்கோட்டை 'யாழ்ப்பாணக் கல்லூரி' நூல்நிலையப் பொறுப்பாளருமாய திரு. கெ. செல்லையா அவர்கள் வாயிலாகத் தந்துதவிய ஆராய்ச்சியறிஞர் திரு. S. R. முத்துக்குமாரு அவர்கட்கும், ஐயர் அவர்களின் கடிதங்கள் பொதிந்த நூற் பிரதியொன்றினை யளித்து இவ்வரலாற்றை எழுதுமாறு தூண்டியவரும், 'ஈழகேசரி'ப் பத்திரா

திபரும் ஆய திரு. நா. பொன்னையா அவர்கட்கும் எமது நன்றியறிதலைச் செலுத்துங் கடப்பாடுடையம். ஐயர் அவர்கள் வெளியிட்ட நூல்களின் பெயர் யாவும் ஆங்கிலத்தில் அறிந்திருந்தும், சில நூல்களின் தமிழ்ப்பெயரை அறியமுடியவில்லை. இவற்றின் தமிழ்ப் பெயரை யறியவிரும்பி அமெரிக்காவுக்கு எழுதியிருக்கின்றோம். கிடைக்கப்பெறின் செல்வி மூலம் பின்னர் வெளியிடுவோம். ஐயர் அவர்கள் தமிழில் வெளியிட்ட நூல்கள் முற்றும் ஏறக்குறைய 4500-பக்கம் உண்டென ஓரறிஞர் குறிப்பிட்டிருக்கின்றார். இவையிற்றின் பெயர்களைக் கீழே காண்க:—

## TEXT BOOK

1. Cutter's Anatomy, Physiology and Hygiene. அங்காதிபாத சுகரணவாத உற்பாலன நூல் A. M. C. Press சென்னை—1857—பக்கம் 204. 2. Maunsell's obstetrics.—பக்கம் 258—1857. 3. Druitt's Surgery.—இரணவைத்தியம்—மொழிபெயர்த்தவர் J-டான்வோத்; பதிப்பித்தவர் கிறீன் வைத்தியர்—அமெரிக்க இலங்கைமிஷின் அச்சியந்திரசாலை மானிப்பாய், 1867,—பக்கம் 504. 4. Gray's Anatomy—அங்காதிபாதம்—மொழிபெயர்த்தவர் D. W. சாப்மன்—1872—பக்கம் 838. ... Hooper's Physician's Vade Macum—வைத்தியாகரம்; மொழிபெயர்த்தவர்—உவில்லியம்போல்— திருத்தியமைத்தவர் S. F. கிறீன்—லண்டன் மிஷன் அச்சியந்திரசாலை, நாகர் கோயில், 1872—பக்கம் 917. 6. Well's Chemistry—கெமிஸ்தம். கிறீன் வைத்தியர் இயற்றியது—D. W. சாப்மனும் S. சாமிநாதனும் உதவிபுரிந்துளார். ல. மி. அ., நாகர்கோயில்—1875, பக்கம் 516. 7. Dalton's Physiology—மனுஷசுகரணம். 1883—பக்கம் 590. 8. Waring's Pharmacopoeia of India—இந்து பதார்த்த சாரம்—மொழிபெயர்த்தவர் D. W. சாப்மன்—பார்வையாளர் S. F. கிறீன் வைத்தியர் இயற்றியது அ. இ. மி. அச்சியந்திரசாலை, மானிப்பாய், 1884—பக்கம் 574.

## VOCABULARIES.

9. Physiological Vocabulary.—1872—பக்கம் 134.

10. Vocabulary of Materia Medica; Diseases of women and Children; Medical Jurisprudence.—1875—பக்கம் 161.

# ஆராய்ச்சிப் பகுதி : Research

## கந்தழி

[திரு. சேனுபதி நடேச செட்டியார் அவர்கள்]

"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே

—தொல். பொரு. புறத். இயல் சூ. 88.

"கொடிநிலை", "கந்தழி", "வள்ளி" என்ற முதலன (ஆன) மூன்றும் வடுநீங்கு கடவுளின் சிறப்பொடு, வாழ்த் தொடு கண்ணிய வருமே" என்று கூட்டிப் பொருள்கொள்க.

கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற இம்மூம்மொழி களின் ஆட்சி தொல்காப்பியத்துப் பொருளதிகாரத்து (பாடாண்டிணை) கடவுள் வாழ்த்துக்கு விதித்த சூத்திரத்தும், (2) வீரசோழியம் பொருட்பால் ஈற்றுச் செய்யுளகத்தும், (3) இலக்கண விளக்கம் முதலிய இலக்கண நூலகத்துப் பாடாண் பகுதிக்கு விதித்த சூத்திரங்களிலும், இன்னிலைச்செய்யுளி லும் காணப்படுவது தவிர மற்ற வேறு யாவராலும், எந்த இலக்கிய நூலகத்தும் காணப்படாத தமிழ்மொழிகளாகும். இதன் பொருள்:—

1. கோடிநிலை:—ஒரு விளக்கில் அமைந்த திரியின் பொருளாகும் (விளக்குத்திரி). ஒரு கொடி தன் ஜீவசத்துவை பூமியிலிருந்து தன் முனைக்கொடிவரைக்கும் கொண்டு செல் லும் திறத்ததேபோல் ஒரு திரி அகலில் உள்ள நெய்யினைச் சுடர் ஒளியைத் தரும் ஒருமுனைக்குக் கொண்டு ஒளிதரும் திறத்தை ஒப்பிட ஒரு கொடியின் தன்மையான நிலையிலே உள்ளது திரி எனப்படுதலால் கோடிநிலை என்ற ஒரு சொற்கு விளக்குத்திரி என்றது பொருளாகும்.

உள்வி ரிந்த புகைக்கொடி உண்டென
எள்ளு கின்றனர் இல்லை விளக்கினை
உள்ளு கின்ற பொருட்டிறம் ஓர்பவர்
கொள்வர் எம்உரை கூறுதற் பாலதே.

—யசோதா காவியம். அவையடக்கம். செய்யுள் 2,

இதன் பொருள்:—உள்ளுகின்ற விளக்கினை ஓர்பவர் (ஆராய்பவர்) விளக்கொளியைத் தருவதான ஒரு அகலுள் வார்த்த, நெய்யுடன் அமைந்த, திரியாகிய விரிந்த கோடியுள் ளிருந்துவரும் ஒளியுடன் புகை உண்டென்று திரியாகிய அக்கோடியை எள்ளுகின்றனர் இல்லை. அஃதேபோல் சிறந்த தோன்றலான யசோதரனது சீரிய குணங்களைக் கூறும் இக் காவியத்தில் அமைந்த இக்காவியத்துள் அமைந்த பொருட்டிறம் ஓர்பவர் யாம் கூறும் சொல்லின் பொருட்செறிவைக் கொண்டு வழுக் களைவர் என்றே கூறுதல்வேண்டும் என்பது.

இதனால் விளக்கின் ஒளியைத் தரும் திரி, கோடி என்ற பொருளில் ஆண்டுள்ளதால் கொடிநிலை என்ற இம்மொழிக்கு விளக்கில் அமைக்கும் திரி என்றது பொருளாகும்.

2. கந்தழி:—மை தீர் சுடர் ஒளி. இது திரியின் ஒரு பக்கத்தில் விளங்கும் சுடர்க்கொழுந்து. பற்று அற்றது, எற்ற எரிவது அவியத்தணிவது, எல்லை எடை அற்ற தீ ஒளிப் பிழம்பு, முப்பெருஞ் சுடரில் தீச்சுடராவது, தட்பதமன தீப்பியமான முக்குணத்தில் தீப்பிய குணமாவது, இருள் நீக்குவது, தனித்து இயங்காதது, சார்ந்து ஒளி தருவது. ஆக்கல், அளித்தல், அழித்தலான முத்தொழிலில் அழிக்குந் திறத்தது.

இதனை விளக்க நச்சினார்க்கினியர் எடுத்தாண்ட ஒரு செய்யுள் :—

*"சார்பு எனத்தோன்றாது தான்அருவாய் எப்பொருட்கும்*
*சார்பு எனநின்று எஞ்ஞான்றும் இன்பந்தகைத்தரோ*
*வாய்மொழியான், மெய்யான், மனத்தான், அறிவு இறந்த*
*தூய்மையதாம் மைதீர் சுடர்."*

இதன் பொருள்:—தூய்மையான ஒளிதரும் மைதீர் சுடரானது எப்பொருளுடனும் சார்பு எனத் தோன்றாதும், உருவாயும், அருவாயும், விளக்கில் அமைத்த திரியின் சார்பு என எஞ்ஞான்றும் நின்று பேரொளியாய் இன்பந் தருவது. இதன் தோற்றம், சிறப்பு, ஈறு, அறிய முடியாத தன்மையதான சுடர் ஒளியாகும். அதன் உருவும், உணர்வும், அமைப்பும் எவ்வகை நுண்ணறிவாலும் விளக்க முடியாத தன்மையது.

*"காதல் விரிகிலத்து ஆராவகை காணார்*
*சாதல் நன்றென்பர் தகைமையோர்—காதலும்*
*ஆக்கி, அளித்து, அழிக்கும், கந்தழியின் பேருருவே*
*நோக்கிலரை நோவ தெவன்."*

இன்னிலை—செய்யுள். 30

இதன் பொருள்:—ஒளிவிரிந்த மண்ணுலகத்து மக்கள் காதலைத் தீர்க்கும் வகை காணார். ஆதலால், சாதல் நன்று என்பர். ஆனால் தகைமையோர் அக்காதலும் பேருருவாம் கந்தழியைப்போல் ஆக்கி, அளித்து, அழிக்கும் திறத்தது என்பர்.

காதல் நோக்கின் திறம் அறியாதவரை நோவதால் யாது பயனுமில்லை என்பது.

தகைமையோர்: ஐந்து பொறிவாசல் போர்க்கதவம் சாத்தி உள் ஒளிகண்டு உவகை கொண்டு, தக்க ஆற்றல் உடையோர் தத்தம் தண்ணொளியாலும், பெருஞ்சினத்தாலும், முத்தொழிலும் செய்யவல்லவர்; இது செய்தற்கு முச்சுடரின் ஒளி உளவாக அமைந்த கண்ணோக்கத்தால் ஆகும். காதலாலும் தொழில் நிகழ்த்தலைக் குறள் ஆசிரியர்,

"கூற்றமோ, கண்ணோ பிணையோ மடவரல் நோக்கம்
இம்மூன்றும் உடைத்து" என்று கூறியுள்ளார்.

இதன் பொருள்—

ஒரு காதலன் ஒருகாதலியின் கண்வலைப்பட்ட காலத்து காதலியின் நோக்கால் அவன் உயிர் உடலுள் கட்டுண்டு தங்குவதாலும் (பிணை)-தண்ணளியால் உயிர் வாழ்தலாலும் (கண்-அருள்) ஊடலில் சற்றே பிரிவதாலும். (கூறு-பிரிதல்) ஆக்கல் அளித்தல் அழித்தல் என்ற முத்தொழிலும் காதலியின் நோக்கால்அமைவது.

இவ்வருமை நோக்கின் உண்மை அறியாதவரை நோவதால் என்ன பயன் என்றதால் தகைமையோரும் நிறைகாதல் உடையோரும் தம் கண்ணோக்கத்தால் முத்தொழிலும் செய்வது கந்தழியின் உருவான முச்சுடரின் தன்மை என்பது ஆதலால் கந்தழி—ஒளிஎன்ற பொருளதாயிற்று.

(3) வள்ளி :—வள்ளி என்ற மொழி வள்ளம் கிண்ணம் அகல் ஆல் தாளி, இடிஞ்சில், தாலம், என்ற பல உருக்கொண்டு அகல் என்ற பொருளதாகும். இது விளக்கமைக்க நெய்க் கொள்ளும் ஒரு கொள்கலனவது. வெள்ளிவள்ளி — வெண்ணிறத்த சங்குவளைமலர்போன்ற உருவானது.

(4) வடூீங்கு கடவுள் சிறப்போடு— சிவபெருமான், பிறவாயாக்கையன், தழும்பு அடையாளம் உருவு அற்றவன், தோன்றாத்திருமேனியன், அனல்வண்ணன், கம்—நீர் =

கங்கை, தழி—தழீஇயவன், கங்காதரன்; கந்தழிக்கடவுள். இறைவனுக்குச் செய்யும் வழிபாடு, வணக்கம் திருவிழா முதலிய காலங்களில் இன்றியமையாப் பொருளாக விளங்குவது திருவிளக்காகும். இது திரி அகல் நெய் இம்மூன்றின் கூட்டுறவால் நிகழ்வது. இம்மூன்றும் முதன் முதல் நாடும் பொருளாயும், பிரித்து அமைவனவும் அல்ல. திருவிழாக்காலத்தில் (கண்ணியவருமே) என்றபடி, அண்ணிய ஒரு பொருளாகும் விளக்கு. கார்த்திகைக்கார்த்திகையில் பேர் எரிவிழாக் காட்சியே கந்தழியின் பெரியஉருவான கந்தழிவிழாவாகும். குன்றின் மேல் ஏற்றும் ஒளியே கந்தழி ஒளியாகும். எனவே கடவுள் சிறப்போடு கண்ணியவருமே என்றபடி ஒரு திருவிளக்கு என்ற பொருளில் அமைவதாகும்.

5. வடுநீங்கு கடவுளின் வாழ்த்தோடு:—கடவுளின் புகழ் பரப்பச் சொன்மாலை தொடுப்போர் தாம் இயற்றும் செய்யுளில், சொற்குற்றம், பொருட்குற்றம் முதலியன தோன்றுவண்ணமும், தாம் முன்னிய பொருள் முற்றுப்பெறவும் வாழ்த்துக் கவி அல்லது காப்புச் செய்யுள் செய்வது கவி மரபும், காவிய இலக்கணமும் ஆகும். இதனை வீரசோழியத்துள்—புகட்சி, பரவல், குறிப்பு என்பர் நூலாசிரியர். அதாவது வாழ்த்து, தெய்வ வணக்கம், வருபொருளுரைத்தல், எனும் ஆசி, நமஸ்காரம், வஸ்துநிர்த்தேசம் என்பர் வட நூலார். இருமொழிப் புலவர்களும் தம் முதற் செய்யுள்களில் கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றினைத் திரி, நெய், அகல் என்பவையின் கூட்டுறவால் அமையும் திருவிளக்கு என்று பொருள் தோன்ற உண்மைப் பொருள் கண்டும் நல் கேள்வித் துறை போகிய நன்று அறி நல்லாசிரியர்களும், தத்தம் நூலகத்து அமைத்ததை நோக்க விளக்கமுறும்.

"இன்னார்க்கு இன்னது இயைக என்று தாம்
முன்னியது கிளத்தல் வாழ்த்தென மொழிப" என்றதால்,

தாம் வழிபடு கடவுட்கும், ஏற்புடைக் கடவுட்கும் நூல் செய்வோரும், சொன்மாலை தொடுப்போரும், தாம் இயற்றும் காப்புச் செய்யுள்களில் இம் முப்பொருள்களை முறையே ஆண்டுள்ளனர் என்பது கீழ்வரும் செய்யுள்களால் விளங்கும்.

6. முதல்ன மூன்றும் கண்ணிய வருமே:—கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற இம்மூன்றும். திரி விளக்கு அகல் என்ற பொருளில் அமைத்தனர் புலவர் பெருமக்கள்.

மேற்கோள் விளக்கம்:—

(1) "நெய்யொடு திரியொக்கச் செய்யானைச்
சேர்வார்க்குப் பொய்யாத உள்ளமே
மெய்யாதல் வேண்டுமே."

—தோல். பொருள். செய்யுளியல். 147. ஆம் சூ. மேற்கோள்.

2. 11-ம் திருமுறை நக்கீரர் இயற்றிய "கைலை பாதி காளத்தி பாதி" அந்தாதி.

(1) சொல்லும் பொருளுமே தூத்திரியும் நெய்யுமா
நல்விடிஞ்சில் என்னுடைய நாவாகச்—சொல்லரிய
வெண்பா விளக்கா வியன் கைலை மேலிருந்த
பெண்பாகர்க்கு ஏற்றினேன் பெற்று. (1)

(தொடரும்)

---

## திருவள்ளுவர்

[4-6-36-இல் கோவைத் தமிழ்சங்கத்தில் திருவள்ளுவர் திருநாட் கொண்டாட்டத்தன்று]

துடிசை கிழார் திரு. அ சிதம்பரனுர் அவர்கள் நிகழ்த்திய தலைமை யுரை

தமிழறிவு சான்ற பெரியோர்களே!

இன்று நாம் திருவள்ளுவர் திருநாளைக் கொண்டாடுவதற்காகக் கூடியிருக்கின்றோம் என்பது உங்களுக்கெல்லாம் தெரிந்ததொன்றே.

திருநாட் கொண்டாட்டத்தில் இரண்டு வகைகள் உண்டு:—

(1) பிறந்த நாட் கொண்டாட்டம்

(2) இறந்த நாட் கொண்டாட்டம்

என்பன.

இன்று நாம் கொண்டாடுவது எந்த நாட் கொண்டாட்டம் என்பதை அறிந்துகொள்ள எல்லாரும் ஆவலுள்ளவராய் இருப்பர் என்பது சொல்லாமலே அமையும்.

"மாசியிலே உத்திரத்தில் வள்ளுவனார் மாநிலம் விட்
டாசில் பரமுத்தி யங்கடைந்தார்—காசினியில்
கொல்லா விரதம் குறிக்கொண்டார் எல்லாரும்
நல்லார்வம் செய்மினந்த நாள்"

என்ற பாசுரப்படி நம் பெருநாவலர் மாசி மாதத்தில் உத்திர நாளிலே பரமுத்தி அடைந்தார் என்று அறிகிறோம். அந்த நன்னாளில் அவருடைய குருபூசையானது திருவாரூர் அறுபத்துமூவர் மடத்திலும் இன்னும் மற்ற இடங்களிலும் செவ்வனே நடைபெறுகின்றது.

இறந்த நாட் கொண்டாட்டம் தமிழர் வழக்கு. பிறந்த நாட் கொண்டாட்டம் ஆரியர் வழக்கு. சைவர்களுக்கு நட்சத்திரம் முக்கியமானது. ஆரியர்களுக்குத் திதி முக்கியமானது.

தமிழ் நாட்டில் வைணவர்கள் பிறந்த நாட் கொண்டாட்டத்தையும் அனுசரிப்பது உண்டு.

நமது செந்நாப் போதாருடைய பிறந்த நாள் எ.துவென அறிய ஆவலுடையவராய் இருப்பீர்கள்.

"வைகாசி மாதத்தில் மாநா ளனுடத்தில்
வைகா சியினிலே வந்துதித்தார்—வைகைநதி
செய்யார் பதியில் திருக்குறளைப் பாடியசீர்
தெய்வத் திருவள் ளுவர்."

என்ற பாசுரப்படி அவர் பிறந்த நாள் வைகாசி மாதம் அனுட நாளாகும்.

இந்த வைகாசிமாதமானது பல பெரியார்கள் செனித்த மாதமாகும். உதாரணமாக:—குன்ற மெறிந்த குமரவேள் வைகாசி விசாகத்திலும், கௌதமசாக்கியமுனி, நம்மாழ்வார், மகம்மதுநபி முதலிய பெரியார்களும், நமது காலம் சென்ற ஐந்தாம் ஜியார்ஜ் சக்கிரவர்த்தியும் வைகாசி விசாகத்திலேயே தான் பிறந்தவர்கள். பட்டந்துறந்த சக்கரவர்த்தியாகிய எட்டாம் எட்வர்டும் வைகாசிமாதத்திலேயே தான் பிறந்தவர். இன்னும் எத்துணையோ பெரியார்கள் இம்மாதத்தில் பிறந்தவராவர். ஆகையால், இவ்வைகாசி மாதமானது ஒரு சிறந்த மாதமாகக் கொண்டாடப்படும்.

ஆரியர்களில் ஒரு பிரிவாரான மேல்நாட்டார் நற்காலம் பிறந்த நாட் கொண்டாட்டத்தையே சிறப்பாகக் கொண்டுள்ளார்கள்.

அதுபோல, கவிச்சக்கரவர்த்தியாகிய வள்ளுவர் பிறந்த திருநாளைத் தமிழராகிய நாமும் கொண்டாடுவது முக்கியமானது.

அப்படிக் கொண்டாடுவதற்குத் தமிழராகிய நாம் சென்ற ஆண்டில் ஆரம்பித்துச் சிறக்கச் செய்தோம். இவ்வாண்டில் இரண்டாம் முறை நடத்தக் கூடியிருக்கின்றோம்.

இப்பிறந்தநாட் கொண்டாட்டத்தினல், அவர் முத்தி யெய்திய தினமாகிய மாசி உத்திரத்தையும் நாம் மறந்தோம் இல்லை. அத்தினத்தில் நம் தமிழ் ஆசாரப்படி குருபூஜைகள் ஆங்காங்கே கொண்டாடப்பெறுகின்றன.

ஆகையால் அன்பர்களே ! நாம் திருவள்ளுவரை எத்தனை விதமாகக் கொண்டாடவேண்டுமோ அத்தனை விதமாகவும் கொண்டாடவேண்டும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த திருவள்ளுவருடைய சரித்திரத்தைச் சரியானபடி தெரிந்துகொள்ளுவது ஒவ்வொருவருடைய கடமையாகும்.

நம் பொய்யில் புலவருக்குச் சரியான சரித்திரம் இதுவரை ஏற்படாமல் இருந்த போதிலும், அவர் செய்திருக்கும் நூலிலிருந்தும், அவர் காலத்துப் புலவர்கள் அவரைப் பற்றிப் பாடியிருக்கும் பாக்களில் இருந்தும் சரித்திரத்தை ஒருவாறு தொகுத்துக் கொள்வது தான் நியாயமானது.

கர்ணபரம்பரைக் கதைகள் இவ்வுட்சான்றுக்கு ஒத்ததாயிருந்தால் அவைகளை எடுத்துக் கொள்ளலாம். முரணுடையதாயிருந்தால் அவைகளைத் தள்ளிவிடுதலே நலம்.

## (1) ஊர்

திருவள்ளுவர் பிறந்த ஊர் கூடல் என்கிற தென்மதுரை என்று வள்ளுவருடன் ஒரு காலத்திருந்த நல்கூர் வேள்வியார் என்னும் பெரும்புலவர்

“உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்சென்ப—இப்பக்கம்
மாதானுபங்கி மறுவில் புலச் செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு”

என்னும் பாசுரத்தால் விளக்கியிருக்க,* கபிலர் அகவலில்,

“தொண்டை மண்டலத்தில், வண்டமிழ் மயிலையில்
பறையரிடத்தில் வள்ளுவர் வளர்ந்தனர்”

என்று கூறப்பட்டிருக்கிறது.

இதில் எது கொள்ளத்தக்கது என ஆராய்வாம். கபிலர் அகவல் ஒரு புனை கதை என்பது பல ஆராய்ச்சியாளர்களுடைய துணிபு.

---

* இச்செய்யுளில் வள்ளுவனார் **மதுரையிற்றான் பிறந்தார்** என்று கொள்வதற்குள்ள ஆதாரங்களை எடுத்துச் சற்று விரிவாகத் திரு. முதலியார் அவர்கள் விளக்குதல் வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறோம். —[ப-ர்.]

"கபிலர்" என்னும் நூலியற்றிய அண்ணமலைப்பல்கலைக் கழக ஆசிரியர் திரு ந. மு. வேங்கடசாமி நாட்டார் கூறுவதாவது:—

கபிலர் மற்ற ஆறுபிள்ளைகளும் போன்று பிறந்த அக்கணத்திலே செய்யுள் இயற்றும் அறிவு பெற்றவர் ஆகலின், வேறு வேறு இடத்தில் பிறந்து வளர்ந்த அப்பிள்ளைகளையும், பிற நாட்டின் இயல்புகளையும், பன்னூற் கருத்துக்களையும் ஒருங்கு உணர்ந்து கொண்டனர் போலும்.

இதிற் கூறப்பட்ட நீதிகளில் சில யாவரும் ஒத்துக்கொள்ளற்பாலனவே. வேறு சில கொள்கைகள் மேன்மையானவை அல்லது தவறுனவை என்று நாம் இங்குக் கூறத் துணிந்திலம்.

அவை நேர்மையுள்ளனவே எனினும் சங்கப்புலவராகிய கபிலருடைய கோள்கையல்ல, என்பது தேற்றம்.

இது சங்கப்புலவர் பாட்டு என்பதற்கு யாதோரு சான்றும் இல்லை.

சான்றேர் பாட்டுடன் சேர்த்து எண்ணத்தகும் நடைப் பெருமை முதலியன இதன்கட் சிறிதும் இல்லை.

சில தொன்னூற் கருத்துக்களையும் தொடர்களையும் ஒரோவழி அமைத்திருப்பதே இதிற் காணப்படும் அழகாகும்.

இப்பாட்டிற் கூறப்படும் எழுவர் வரலாறும் முதற்குறளில் உள்ள "ஆதிபகவன்" என்னும் தொடரைத் திருவள்ளுவருடைய தாய்தந்தையரின் பெயரெனத் திரிபுடக் கருதிக் கொண்ட ஒருவனது சூழ்ச்சித்திறனல் விளைந்த புனைந்துரையே யன்றி வேறல்ல.

தன் கொள்கையினை உலகில் வெளிப்படுத்தற்கு ஏற்ற பெற்றியாக இக்கதையினை ஆக்கிக்கொண்டதே அவனது சூழ்ச்சித்திறனுகும்.

கபிலரது ஊர் பாண்டி நாட்டுத் திருவாதவூர் என்று பழைய திருவிளையாடற்புராணத்தில் பெரும்பற்றப் புலியூர் நம்பிகள் கூறுவதற்கு மாருக, சோணுட்டுத் திருவாரூர் என்றும், அதியனது ஊர் தகரே எனப் பழைய நூல்கள் கூருநிற்க அதற்கு மாருக வஞ்சி என்றும், இவ்வகவல் கூறுவது பிழையாகும்.

அதியர்குடி என்னும் பழங்குடியில் தோன்றி, வள்ளலாக விளங்கிய அதியமான் நெடுமான் அஞ்சி என்னும் சிற்

றரசனையும், அவனைப் பல பாட்டுகளால் புகழ்ந்து பாடிப் பரிசில் பலபெற்றுப் பல ஊர்களிலும் திரிந்து வாழ்நாள் நடத்திய ஒளவை என்னும் தொன்மூதாட்டியையும், உடன்பிறந்தார் எனக் கூறுதற்கு அறிவுடையோர் எங்ஙனம் ஒருப்படுவர்!

ஒளவையார், கபிலர் அதியமான் என்னும் மூவரும் ஒரு காலத்தினர் என்ற அளவே உண்மையாகக் கொள்ளலாம். வள்ளுவர் அக்காலத்தோ அதனின் முற்காலத்தோ விளங்கினவராவர்.

இவற்றால், ஆதிபகவன் என்னும் பெயர்களும், ஒளவையும், அதியமானும் ஒருங்கு கேட்கப்பட்டமைபோன்ற சில செய்திகளும், பற்றுக்கோடாகக்கொண்டு இக் கதை புனைந்துரைக்கப்பட்டதென் றறிக''

ஞானமிர்தம் என்னும் நூலில் ஆதிபகவன் என்னும் பெயர்களை விடுத்து, அறிவில்லாத சண்டாளப்பெண் என்றும், யாளிதத்தன் என்னும் முனிவன் என்னும் கூறப்பட்டிருக்கிறது'' என்று ஆராய்ச்சிசெய்து கபிலர் அகவல் என்னும் நூலையும் ஞானமிர்தத்தையும் ஒதுக்கிவிட்டார்.

ஆகையால், நாம் சங்கப்புலவரில் ஒருவரான நல்கூர் வேள்வியாருடைய கூற்றையே உண்மையாகக் கொள்ளவேண்டியிருக்கிறது.

மேலும், மேலேகாட்டிய அவர் பிறந்த நாளைக் குறித்துப் பாடப்பட்டிருக்கும் தனிப்பாடலில், வள்ளுவர் திருக்குறளை வைகைநதி பாயும் மதுரையம்பதியில் பாடினதாகக் குறிக்கப்பட்டிருக்கிறது.

ஆகையால், நம் முதற்பாவலருடைய சொந்த ஊர், அதாவது பிறந்த ஊர், கூடல் என்கிற மதுரையேயாகும்.

## (2) குலம்

கபிலர் அகவலையும் ஞானமிர்தத்தையும் புனைகதைகள் என்று ஒதுக்கிவிட்டால், வள்ளுவருடைய குலம் எது என்று ஒரு கேள்வி உண்டாகலாம்.

நம் நாயனர் பெருநூலாசிரியர் ஆவர். நூலாசிரியன்-உரைஆசிரியன்—போதகாசிரியன் என ஆசிரியர்கள் மூவகைப்படுவர். இவற்றில் நம் ஆசிரியர் நூலாசிரியர் ஆவர்.

நூலாசிரியர் முதலிய மூவகை ஆசிரியர்களுக்கு

''குலன், அருள், தெய்வங்கொள்கை, மேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை

நிலம்-மலை-நிறைகோல்-மலர் நிகர் மாட்சியும்
உலகிய லறிவோடு உயர்குணம் இனையவும்
அமைபவன் நூலுரையாசிரியனனே''.

என்ற இலக்கணப் பிரகாரம் மேற்கண்ட குணங்களெல்லாம் அமைந்திருக்க வேண்டும். அக்குணங்களில் முதன்மை வாய்ந்தது குலம்.

ஆகையால் நம் ஆசிரியராகிய வள்ளுவர் உயர்குடிப்பிறப்பினராய் இருத்தல் வேண்டும்.

நம் நூலாசிரியரைப் பெருவாரியாக அவருடைய பட்டப் பெயரைக்கொண்டே குறிப்பிட்டுள்ளார்கள். அதனால் அவருடைய இயற்பெயரை எல்லாரும் மறந்து விட்டார்கள். "வள்ளுவர்" என்ற பெயர்ப்பொருளையும் மறந்து இயற்பெயராகக் கொண்டு விட்டார்கள். அதனால் வந்த விளைவுதான் வள்ளுவரை வள்ளுவசாதிக்கு உட்படுத்தினது.

"வள்ளுவரென் பெயர்பொருளை மறந்தந்தோ தமிழ்மக்கள்
வெள்ளைமொழிப் பொருள்கொள்ள விதித்தவிதி கொடுவிதியே"

இந்த மாதிரித் தடுமாற்றம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முந்தியே ஏற்பட்டுவிட்டது.

வள்ளுவர் காலத்தை ஒட்டிச் சங்கத்தில் புலவராயிருந்த மாமூலனார்

"அறம் பொருள் இன்பமே வீடென்னும் நான்கின்
திறம் தெரிந்து செப்பிய தேவை-மறந்தேயும்
வள்ளுவனென்பானோர் பேதை அவன் வாய்ச்சொல்
கொள்ளார் அறிவுடை யார்.

என்று கூறி மயக்கத்தை ஒழித்தார். அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பேராசிரியரான திரு. சோமசுந்தரபாரதியார் என்பார் நன்றாய் ஆராய்ந்து நம்முடைய வள்ளுவனார் உயர்ந்த வேளாண்குல வள்ளல் என்று அறுதியிட்டுள்ளார். அவர் கூறியுள்ள நியாயங்களை அவருடைய கட்டுரையில் கண்டு கொள்க. நாம் இங்கு மீட்டும் கூற அவகாசமில்லை. ஆகையால், அவர் கொண்ட முடிவைமாத்திரம் நாம் எடுத்துக் கொள்வோம்.

ஆகையால், நம் வள்ளுவனார் தமிழ்நாட்டில் உயர்ந்த குடியாகிய வேளிர் குலத்தைச் சேர்ந்தவர் என்பது வெள்ளிடைமலையாம்.

ஒவ்வொரு நாட்டினருக்கும் சாதிப்பிரிவினைகள் உண்டு. உதாரணமாக:—

(1) மகம்மதிய நாட்டில் ஷேக்-சையத்-சுன்னத்- பட்டான் என்ற நான்கு பெரும் சாதிகள் உண்டு.

(2) ஆங்கில நாட்டிலும் கிரீக்சர்ச் - ரோமன் கத்தோலிக்—புரோடஸ்டாண்டு என்ற மூன்று பெரும் ஜாதிகள் உண்டு.

(3) பழைய ஆரிய நாட்டில் பிராமணன் - க்ஷத்திரியன்-வைசியன் - சூத்திரன் என்ற நான்கு பெரும் சாதிகள் உண்டு.

(4) அதுபோல, நம் தமிழ் நாட்டிலும் "பள்ளுப்பறை பதினெட்டு சாதிகள்" என்ற 18 பெரிய சாதிப்பிரிவுகளும், 18 தொழிலாளர்களுடைய உபசாதிகளும் உண்டு.

வண்ணான் - நாவிதன் - முதலிய தொழிலாளிகள் 18உப சாதியில் சேர்ந்தவர்கள்.

பெரிய சாதி 18-லும் உயர்ந்த சாதி மருதநிலத்தலைவர் ஆவர். தமிழ் நாட்டில் சாதிகள் ஐந்திணையை ஒட்டி வகுத்து இருக்கிறார்கள்.

பிரம - க்ஷத்திரிய - வைசிய - சூத்திர சாதிப்பாகுபாடு தமிழ் நாட்டில் ஆரியர் வருவதற்குமுன் இல்லை.

ஆகையால், நம் வள்ளுவர் தமிழ்நாட்டில் உயர்ந்த குடியில் சேர்ந்தவராகிய வேளிர்கள் குலத்தைச் சேர்ந்தவர் ஆவார்.

அவர் அக்குலத்தைச் சேர்ந்தவர் என்பதற்குச் சான்று வேறு வேண்டியதில்லை. அவருடைய மனைவி எக்குலத்தினர் என்று கண்டுகொண்டால் போதும். அவருடைய மனைவியாகிய வாசுகி அம்மையார் என்பவர் மார்க்கசகாயர் என்ற வேளாண் பிரபுவின் புத்திரியாவர்.

அக்காலத்தில் தமிழ்நாட்டு வேளிர்கள் மிகுந்த செல்வந்தர்களாகவும் - காணியாளர்களாகவும் - கொடைவள்ளல்களாகவும்-சிற்றரசர்களாகவும் - சேனாதிபதிகளாகவும்-அமைச்சர்களாகவும் - பேரரசர்களாகவும் - புலவர்களாகவும் - தவம் கைவரப்பெற்ற யோகிகளாகவும் - ஞானிகளாகவும் விளங்கி உள்ளார்கள். அவர்கள் சிலர் நினைக்கும் மாதிரி கலப்புமணம் முதலியன செய்து வந்ததாகத் தெரியவில்லை.

"கோடிகொடுத்தும் குடிப்பிறந்தார் தம்மனையில்
கூடுதல் கோடி பெறும்"

என்ற பழமொழியைக் கடைப் பிடித்துத் தங்குலம் அல்லாத வேற்று மனிதருக்குத் தம்மகளிரை மணம் முடிப்பவர் அல்லர்- அப்படி வேற்றரசர் படை வலிமையாலும் வேறு சூழ்ச்சி

களாலும் பெண் கொள்ள முயற்சிப்பாரேல் அவர்களுக்குத் தகுந்த புத்தி புகட்டும் வன்மையாளராய் இருந்தார்கள்.

"பெண் கேட்ட வேந்தனுக்குப் பெண்ணுயைப் பந்தலிலே
கட்டிவைத்த பண்பது போல்"

என்ற ஆத்திசூடி வெண்பாவின் சரித்திரத்தை உணர்ந்தவர்கள் தமிழ்நாட்டு வேளிர்களுடைய மனப்பான்மையை அறிவர்.

தமிழ்நாட்டு வேளிர்களை Conservatives அதாவது புராதன வழக்கங்களைக் கைவிடாதவர்கள் என்று கூறுவது வழக்கம்.

ஆகையால், நம் வள்ளுவர் எப்போது ஒரு வேளிருடைய மகளைக்கலியாணம் செய்தாரோ அப்போதே அவரும் வேளிர் குலத்தவரே என்று சந்தேகமின்றிக் கூறலாம்.

(தொடரும்)

---

## பனையும் பழந்தமிழ் நூல்களும் பிறவும்

[பண்டிதர் ஸ்ரீமத் கா. போ. இரத்தினம் அவர்கள்.]

*மூளாய் சைவப்பிரகாச வித்தியாசாலைத் தலைமை ஆசிரியர்*

(௪அஅ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

இனிச் சேர அரசர்கள்மேற் பாடப்பெற்ற பதிற்றுப் பத்தில் 'போந்தைப் பொழில்' என்றோர் சொல் காணப் படுகிறது. இதிலிருந்து அக்காலத்தில் பனைகள் நிறைந்த பல இடங்களிருந்தன என்பதும், அவற்றை எல்லாம் பனஞ் சோலை, பனம்பொழில் என அழைத்தார்கள் என்பதும், பெறப்படுகிறது. பனைகள்நிறைந்த இடத்தைப் பனம்பொழில் என்று இக்காலத்துக் கூறின் நகைப்பார் பலருண்டன்றே!

"கூவற்றுழந்த தடந்தாள் நாரை
குவியிணர் ஞாழன் மாச்சினை சேக்கும்
வண்டிறை கொண்ட தண்கடற் பரப்பின்
அடும்பம லடைகரை யலவன் ஆடிய
வடுவடு நுண்ணயிர் ஊதை உஞற்றும்
தூவிரும் போந்தைப் பொழிலணிப் பொலிதந்து"

எனும் பதிற்றுப்பத்தடிகள் ஓர் போந்தைப்பொழிலைப்பற்றிக் கூறுகின்றன. இப்போந்தைப் பொழிலில் ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் எனும் அரசன் பலருடன் தங்கியிருந்து விறலியரது பாடல் கேட்டு மகிழ்ந்தான் என்பது போதரக் காக்கை

பாடினியார் நச்செள்ளையார் எனும் நல்லிசைப் புலமை மெல்லியலார் பாடியிருக்கிறார். பனங்குருத்தைக் கிழித்துக் குறுகநறுக்கி வாகைப்பூவோடு சேர்த்தும், கொன்றைப் பூவோடு சேர்த்தும், குவளை மலரோடு சேர்த்தும் இன்னும் பலவகைப் பூக்களோடு சேர்த்தும் மாலைதொடுப்பர் எனப் பதிற்றுப்பத்துப் பகர்கின்றது. ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றாகிய சிலப்பதிகாரத்தில் சேர அரசர்கள் பனைமாலையைச் சூடுபவர்கள் என்பதும், பனந்தோட்டுடன் வாகை, தும்பை, வஞ்சி முதலிய புறத்திணைப் பூக்களையும் சேர்த்துத்தொடுப்பர் என்பதும் கூறப்படுகிறது. "வட்கர்போகிய வான்பனந் தோடு" எனுஞ் சிலப்பதிகார அடியைக் கூறும்போது "வட்கர் போகிய வளரிளம் போந்தை" எனும் புறநானூற்றடி ஞாபகத்திற்குவரும். 'வட்கர்போகிய' என்பதற்குப் பகைவர் தொலைதற்கேதுவாகிய, அல்லது இடையில் முரியில்லாத என உரைக்குக.

சிந்தாமணியில் மலைப்பாம்புக்கு விழுந்துகிடக்கும் பனையையும் வீரரின் தோளுக்குப் பனையையும், பிச்சநிரைக்கு மடற்பனைக் குழாத்தையும், மாலைக்குப் பனையையும், உவமையாகக் கூறப்பட்டிருக்கிறது. பனங்குரும்பையைப் பெண்களின் ஸ்தனத்திற்கு உவமையாகக் கூறுவது தமிழ்ப் புலவர்கள் மரபு. "கொழுமடற் பெண்ணையீன்ற குரும்பையுஞ் செப்புங்கொன்றை விழைமுலைத் தடத்தினாள்" என்பதும், "முலையீன்ற பெண்ணைத்திரள்" என்பதும் சிந்தாமணி.

> "வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்த்தனபோல்
> ஏரியவாயினும் என்செய்யும்—கூரிய
> கோட்டானைத் தென்னன் குளிர் சாந்தணியகலம்
> கோட்டுமண் கொள்ளா முலை"

என்பது முத்தொள்ளாயிரம்.

> "பொருங்களத் தாடவர் பொருவில் பைந்தலை
> அரும்பெறற் கண்ணியோ டற்று வீழ்வன
> கருங்கனிப் பெண்ணையங் கானங் கால்பொர
> விருங்கனி சொரிவன போன்ற வென்பவே"

எனுஞ் சிந்தாமணிச் செய்யுளில் போர்க்களத்தே வீழும் வீரர்களின் தலைக்குப் பனையிலிருந்து விழுகின்ற பனம்பழங்களை ஒப்பிடப்பட்டிருக்கிறது. 'பனங்காடு' என்னுஞ் சொல்லும் அக்காலத்து வழங்கியதுபோலும். காற்றடிக்கப் பனம் பழங்கள் ஒருசேர வீழ்தலை இச்செய்யுளானேயன்றி "சூழ் குலைப் பெண்ணை நெற்றித்தொடுத்த தீங்கனிகள் ஊழ்த்து வீழ்வன" எனுமடிகளாலுமறியலாம். பரிபாடலிலும் அவுணர்

களின் தலையைப் பனம்பழத்துக்கும் அத்தலைகள் அறுபட்டு வீழ்தலைப் பனம்பழ வீழ்ச்சிக்கும் ஒப்பிட்டுரைக்கப்பட்டிருக்கிறது.

"தலையிறுபு தாரொடு புரள
நிலைதொலைபு வேர் துார் மடல்
குருகு பறிய நீளிரும் பனைமிசைப்
பலபதி னாயிரங்குலை தரை யுதிர்வபோல்"

இவை பரிபாடலடிகள். பெருங்கதையிலும் இக்கருத்துப்பட,

"ஓங்கு மடற் பெண்ணைத் தீங்குலைத் தொடுத்த
விளைவுறு தீங்கனி வீழ்ச்சி யேய்ப்பத்
தளையவிழ் தாமொடு தலைபல புரளவும்"

என உரைக்கப்பட்டுளது. இப்பெருங்கதையில் பனையைப் பற்றிக் காணப்படும் குறிப்புகள் சிலவற்றை ஈண்டுக் குறிப்பிடுதும். 'கொய்து அகை போந்தும்' எனும் அடி பனையில் இடையிடையே ஓலை வெட்டப்படுதலைப் புலப்படுத்துகிறது. 'மடலிவர் போந்தை மதர்வை வெண்தோட்டினும்............ இயன்ற பந்தர்' என்ற தொடர் பந்தல் முதலியவற்றிற்குப் பனையோலை உபயோகிக்கப்பட்டதைக் குறிக்கிறது. இக்காலத்தும் சிலர் அணிவதுபோல் முற்காலத்தும் பனந்தோட்டானியன்ற காதணியை அணியும் வழக்கமுண்டென்பதற்கு "இனமலர்ப் பெண்ணை ஈர்ந்தோடு திருத்தி" எனுமடி சான்றாகும். "பனஞ்செறும்பன்ன பன்மயிர் முன்கை" எனுமடி முன்கையிலுள்ள மயிருக்குப் பனஞ்செறும்பை உவமையாக்குகிறது செறும்பு இக்காலத்தில் சிறும்பு என வழங்கப்படுகிறது

"பெண்ணைவன் செறும்பிற் பிறங்கிச் செறிவண்ண
வன்மயிர் வார்ந்துயர் முனகையன்"

என்றார் கம்பரும்.

பனையோலையே முற்காலத்து எழுத உபயோகிக்கப்பட்டதென்பதை யாவரும் நன்கறிவர். அவ்வோலையில் கணக்கெழுதுதலும் உண்டென்பது பெருங்கதையால் பெறப்படுகிறது.

"இரும்பனை யிளமடல் விரிந்துளர் வெண்டோட்
டீர்க்கிடை யாத்த நூற்புரிப் பந்தச்
செந்தோட் டணிமலர் சேர்ந்த வுச்சி
அந்தோட் டம்பனை யரக்குவினை யுறீஇய
சித்திரத் திண்கால் வித்தகக் குடையினர்"

எனுமடிகள் பனைமடலால் செய்யப்பட்ட ஓர் குடையைப்பற்றி மிக விரிவாக வர்ணிக்கின்றன. பனையோலையால் சக்கரமுஞ் செய்வர். நிற்க,

பனம்பழத்தொடு சேர்ந்த ஓர் நியாயமுண்டு. அஃது காகதாலியமெனப்படும் **काकतालीयन्याय:** காகமேறப் பனம் பழம் வீழ்ந்ததென்பது.

"மன்னிசை வெங்கையுடைய பிரான்வரை மானுசுப்பைப்
பொன்னிசை கொங்கை யொடித்தாலு நிந்தை பொருந்துமை
மின்னிசை மென்குழ லேறன்மின் நீவிர் விளங்கிலிரோ
இன்னிசை வண்டினங்காள் காகதாலியம் என்பதுவே"

எனுந் திருவெங்கைக் கோவைச்செய்யுள் காகதாலிய நியாயத்தை விளக்கும்.

தமிழ்நூல்களில் பனையைப்பற்றிய குறிப்புகள் இன்னும் பலவுள. அவற்றை எடுத்துரைப்பின் பரந்து செல்லுமாதலின் பாரிமகளிர் திருமணத்துக்கு வந்த முடியுடைமூவேந்தரும் வேண்ட, அருந்தமிழ்ச்செல்வியாகிய ஔவையார் பனந் துண்டந் தளிர்த்துப் பழந்தரப் பாடிய செய்யுளை மாத்திரம் ஈண்டுத்தந்து இக்கட்டுரையை முடிக்குதும்.

"திங்கட்குடையுடைச்சேரனும் சோழனும் பாண்டியனும்
மங்கைக்கறுகிட வந்துநின் றூர்மணப் பந்தலிலே
சங்கொக்க வெண்குருத்து ஈன்று பச்சோலை சலசலத்து
நுங்குக் கண்முற்றி அடிக்கண் கறுத்து நுனிசிவந்து
பங்குக்கு மூன்று பழந்தரவேண்டும் பனந்துண்டமே."

---

# இலக்கணமும் இலக்கியமும்:
## LANGUAGE AND LITERATURE

### கலித்தொகை உவமைக் காட்சிகள்

[வித்வான் திரு அ. மு. பரமசிவானந்தம் அவர்கள்]

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைமல்கும் அருந்தமிழ் நாட்டகத்தே முப்பெருஞ்சங்கங்கள் மிக்கதோர் நிலையில் மிளிர்வடைந்து மேன்மையுற்றுத் திகழ்ந்திருந்தன. அப்பெரும் சங்கங்களிலமர்ந்த ஆன்றோர் பலர் இயற்றிய அருந்தமிழ் நூல்கள் கணக்கில. கடற்றிரைகளும், மற்றும் சிலவும் அவைகளிற் பெரும்பாலனவற்றை நம் கண்ணிற்காட்டாது மறைத்துவிட்டன. எனினும் அவற்றுள் ஒருசில இன்னும் நம்மிடை காணப்படுகின்றன.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் நம் கன்னித் தண்டமிழ்நாட்டில் கூடலாம் மதுரையில் கடைச்சங்கம் நிலைத்தோங்கி இருந்தது. அக்காலத்தில் ஆன்றோர் இயற்றிய நூல்களும் பல. அவைகளுள் நம்மிடை காணப்படுவன சில. அவற்றைப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்று முப்பகுப்பாகப் பிரித்துள்ளனர். இவைகளது பிரிவுகளும் ஒவ்வொரு தன்மையாகத்தான் அமைந்தன வென்று வல்லோர் கூறுகின்றனர்.

இத்தகைய பிரிவாயமைந்துள்ள நூல்களை ஆராய்வோமாயின் அவைகளிலுள்ள சொல் நயங்களும், பொருள் நயங்களும் துதைந்துள்ள பகுதிகள் நம்மனதுக்கு அருமை மிக்கதோர் பெருவிருந்தாகும். 'விருந்தென்பது புதுமை மேற்றாதலின் இவ்விருந்தும் உன்னுந்தோறும், உணருந்தோறும் புதுமைமிக்கதாய் உன்னுவார் உளத்துக்கு விருந்தாகவே விளக்கமுறும். இவ்வாறு இனிமைபொருந்திய பாடல்களை அழகு செய்வது, மங்கையர்க்கழகு செய்வது மாபெரும் அணிகளாயவாறுபோல், சொல் அணிகளும் பொருளணிகளுமேயாம். இவ்வணிகள் பயில்வார் உள்ளத்தணிகளேயாம் என்று கூறுவதில் வியப்பில்லை. மக்கள்மே லணியும் அணிகள் பிறரால் கொள்ளப்பட்டும், பிறவாற்றானும் பேசுமிடமற்றும் பிழைப்பட்டுப்போகும். ஆனல் இச்செய்யுள் அணிகளே ஒருமுறை பயில்வார் உள்ளத்தமர்ந்து உன்னுந்தோறும் உவகை உணர்ச்சியை அளித்துநிற்கும்.

இந்த அணியிலக்கணம் இன்று நம்மிடையில் பலவாருகப் பல்கிக் கிடக்கின்றது. தண்டி ஆசிரியருடையதும், மாறன் மேற் பாடியதுமாகிய இருஅணி நூல்களும் விரிவை உடையவைகளாகப் பல்வேறுவகையெனப் பரந்து கிடக்கின்றன. எனினும் பல ஆயிர ஆண்டுகட்குமுன் இச்சங்க நூல்களெல்லாம் தோன்றுதற்குச் சான்ருயிருந்த தொல்காப்பியத்தே அணி ஒன்ருகவே எண்ணப்படுகின்றது. அஃது உவமை என்பதாகும். அவ்வுவமை அணியிலிருந்தே பல்வேறு அணிகளும் கிளைத்தனவென்பது உலகறிந்த உண்மையாகும். இதைத் தண்டியலங்காரத்தே உவமை அணியோடு வேறு சில அணிகளைச் சேர்த்துக் காட்டியுள்ளதிலிருந்து புலனுகும். எனவே உவமை அணி ஒன்றே நம் தமிழ்நாட்டில் நிலவிவந்ததென அறியக்கிடக்கின்றது. மற்றுவேறு அணிகள் இருந்து தொல்காப்பியனுர் கூருது விட்டாரோ எனின் அற்றன்று. இலக்கியங்கண்டதற்கு இலக்கணமியம்புதல் மரபாதலின் அவ்வாறு இருந்திருப்பின் ஆசிரியர் தொல்காப்பியனுர் அவற்றைக் கூருதுவிடார். உவமைக்கென்றே உவம இயல் எனத் தனியியல் அமைத்து அதன் சிறப்புகளை தம்நூலில் தெற்றெனக் காட்டியுள்ளனர். ஆதலின் நாமும் தமிழ்ச் சுவையினைப் பருகவிரும்பின் அத் தொல்காப்பியர் கூறிய உவமை அணியினையே நாடல் வேண்டும் அன்பது நன்கு புலப்படும்.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்று இவ்வாருகப் பகுக்கபட்ட தமிழ்நூல்கள் எல்லாவற்றினும் இவ்வுவமை அணிகாணப்படுகிறது. அகப்பொருளைப் பற்றியதும், புறப்பொருளைப் பற்றியதுமாகிய இருவகை நூல்களிலே இவ் வுவமை அணி சிறந்துள்ளது. அவ்வாருய நூல்களில் ஒன்ருகிய "கலித்தொகை"யை எடுத்துக்கொண்டு அதிலுள்ள உவமை அணிகளை உன்னுவாம்.

'கற்றறிந்தா ரேத்துங் கலி' என்ற தொடர் கலித்தொகைக்கு உள்ள பெருஞ்சிறப்பைக் காட்டப் போதிய சான்ருகும். கற்றறிந்தார் ஏத்துதற்கு ஆங்கு என்ன சிறப்புடையது என எண்ணின் நாம்மேற்கூறிய உவமை அணி அந்நூலை அணிபெறச்செய்கின்றது என அறியலாம். எனவே, அவ்வாருய கற்றறிந்தார் கண்டு மகிழும்உவமை அணிகளை யாவரும் அறிந்து இன்புறப்பாலர் என்பதற்காகவே எழுந்தது இக் கட்டுரை.

இக்கலித் தொகையில் நூற்றுஐம்பது பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு நிலத்துக்கும் தனித்தனியே செய்யுள்கள் காணப்படுகின்றன. அவற்றுள் முதலாவதாகப் பாலை கூறப்பட்டுள்

ளது. 'போக்கெல்லாம் பாலை' என்றதனால் பாலை பிரிந்துபோ தலைப்பற்றியதாகும். இப்பாலைப்பகுதியில் முதலாவதாக வந்துள்ள பாவில் பொருள்வயிற் பிரிவேனென்ற தலைமகற்குத் தலைமகளது இளமைகூறி இப்பெற்றியளைப் பிரியாமையே பொருளாவதெனச் சொல்லிச் செலவழுங்குவித் தமையைத் தோழி தலைமகட்கு வந்து சொல்லியதைக் காட்டப்பட்டுள்ளது. இதில் உள்ள ஓர் உவமை நயம் உன்னற்பாலது.

தலைவன் செல்லும் வழி வெம்மைமிக்கது. அதில் வெப்பமே உதிர்ந்து நிற்பனபோல் கொடுமையுள்ளது. அத்தகைய தொலையாவழியிடைத் தலைவன், தலைவிதன் பிரிவால் இங்கே இறந்துபடும்படி செல்லல் நீதியல்ல என்று தோழி கூறுகின்றாள். இவ்வழிக்கொடுமைக்கு உவமையாக ஒன்று கூறப்பட்டுள்ளது. அஃதாவது, அவுணரைக் கடந்தட்ட அண்ணலாம் சிவபெருமான் தேவர்துயர் நீப்பான் வேண்டி மூன்று எயில்களையும் சினக்கையினாலே அம்முப்புரம் அழிதலைப் பெற்று உதிர்வனபோல ஒள்ளிய ஞாயிறு சுடுகையினாலே வெம்மை விழுந்து விளங்கும் தொலையாவழி என்று கூறுகின்றார். அவ்வடிகள் வருமாறு:

'தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக
வடங்காதார் மிடல்சாய வமரர் வந்திரத்தலின்
மடங்கல்போல் சினைஇய மாயஞ்செய் அவுணரை
கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலும்
முடன்றக்கான் முகம்போல வெண்கதிர் தெறுதலிற்
சீறருங் கணிச்சியோன் சினவலி னவ்வெயி
லேறுபெற் றுதிர்வன போல் வரைபிளந் தியங்குந
ராறுகெட விலங்கிய வழலவி ராரிடை
மறப்பருங் காத லிவளீண் டொழிய
இறப்பத் துணிந்தனிர் கேண்மின்.'

இந்த உவமையில் உள்ள நயமாவது: முக்கணான் மூவெயிலை உடல அவன் முகந்தெறுமாறு போலக் கதிர்கள் தெறுகின்றன. அவன் சினக்கையினாலே அவ்வெயில் ஏறு பெற்று உதிர்வனபோல வரைபிளந்து உதிர்ந்து விளங்கிய வழி அது என்பது. முதலாகவந்த இச்செய்யுளில் இறைவனாரை உவமையாகக் காட்டிய நயம் மற்றொன்றுண்டு. எவ்வாறு அண்ணல் உடன்று அவுணரை அழித்தனனோ அத்தன்மையாகவே இக்கலித்தொகை என்னும் நூலிலும் உண்டாகும் பல்வேறு குறைகளாகிய அவுணரை அழித்தெரிப்பன் என்பது காணக்கிடக்கின்றது.

இனி, தலைவனை, தலைவியின் இயற்கை நலம் கூறி அவ்வாறாய தலைவி இறந்துபடக்கூடும் என்று தோழி போக்காகத் தடுக்கத் தலைவன் உடன்பட்டு நின்றான். அதற்கு உவமையாகக் கூறப்பட்டது இது. பரிக்கோலாற் குத்தவும் தன்னெறியினில்லாத செலவு கடகளிற்றொருத்தல் சொல்லிய யாழோசையின் எல்லையிற்றங்கியது போலாகும் என்பது இதைக் கலித்தொகை அடிகளாற் காண்போம்.

'புன்கண் கொண் டினையவும் பொருள்வயி னகற
லன்பன் றென் றியான் கூற, வன்புற்றுக்
காழ்வரை நில்லாக் கடுகளிற் றொருத்தல்
யாழ்வரைத் தங்கி யாங்குத் தாழ்புநின்
றொல்கவின் றொலைதலஞ்சி யென்
சொல்வரைத் தங்கினர் காதலோரே'

---

# மோரியர் படையெடுப்பு

[வித்வான் திரு. மா. இராசமாணிக்கம், P. O. L.]

மோரியர் படையெடுப்பைப்பற்றிய செய்யுளடிகள் சென்ற இதழில் தரப்பெற்றன. அவற்றை நன்கு ஆராயின், மோரியர்க்கு உதவியாக 'வடுகர்' என்பவரும் 'கோசர்' என்பவரும் ஆக இருவகைப் படைவீரர் இருந்தனர் என்பது பெறப்படுகிறது. இவ்விருவர் கொண்ட இருவேறு படைகளை மோரியர் முன் அனுப்பித் தாம் பிற்சென்றதாக மேற்கூறிய பாடலடிகள் பறையறைகின்றன. அடிமைப்பட்ட நாட்டு வீரரை, அவரை ஆட்கொண்ட பிற நாட்டார் தாம் படையெடுக்கும் முன்னர்ப் புகவிடுதல் இன்றை வழக்கமாகவும் இருந்து வருதல் கண்கூடு. மகத ராச்சியத்து மோரியர் தாம் வென்றடக்கிய வடுக வீரரையும் கோசரையும் இம் முறையில் தம் தமிழகப் படையெடுப்புக்குப் பயன்படுத்தினர்.

### வடுகர்

வடுகர் என்போர் தமிழகத்துக்கு வடக்கே இருந்தவர் :

"பனிபடு சோலை வெங்கடத் தும்பர்
மொழிபெயர் தேஎத்தர்." [1]

"கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்" [2]

---

1. அகநானூறு, 211.  2. ,, , 107.

"கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்" 1

இன்னணம் பலவாறு வடுகர் இயல்புகள் தமிழ்நூல்களில் நன்கு குறிப்பிடப் பட்டுள்ளமையால், தமிழர் வடுகரோடு பழக்க முடையர் என்பதும், தமிழர் வடுகதேயம் தாண்டிப் பொருள் வயிற் பிரிதல் மரபென்பதும் பிறவும் நன்குணரலாம். இவ் வடுகர், வேங்கடத்துக் கப்பாற்பட்ட கன்னடரும் தெலுங் கருமே யாவர்.

### கோசர்

கோசர் இன்ன நாட்டவர் எனத்தெளிவாகத் தமிழ்நூல் களில் கூறப்பட்டிலர். ஆயினும், சொற்படி நடப்பவர்;2 அவர் நாடு 'நெய்தலஞ் செறு' எனப்படுகிறது. 3 அவ்விடம் தமிழ கத்த தாயின், கோசர் மோரியரோடு தமிழகம் புகுந்தனர் எனவரும் செய்யுளடிகட்கு முரண்பட்டதாகும்.

எனவே, போரில் அவர்தம் ஆற்றல் கண்ட தமிழ் வேந்தர் அவரைச் சேவகத்திற் பிற்றை நாளில் வைத்துக்கொண் டனர்; 'அவர்கள் நெய்தலஞ்செறு' என்ற இடத்தில் இருந்து வந்தனர் என ஒருவாறு கொள்ளலாம். கோசர், வடுகரைப் போலவே மோரியர் ஆட்சிக்கு உட்பட்டவராகத்தான் இருந் திருத்தல் வேண்டும். இன்றேல், அவர் மோரியர் படையில் இடம் பெறுதல் யாங்ஙன மியலும்? பாக்களில் வரும் 'வட வடுகர்'4 'வம்ப வடுகர்'5 என்னும் தொடர்கள் இக்கோசரையே குறிப்பன என்பது சந்தர்ப்பம் நோக்கி அறிவுடையோர் அறியக்கூடும். இதனால், இவ்வீரர், டெக்கான் பிரதேசத்துக் கும் வடபாற்பட்டவர் எனவும், இவரைத் தமிழர் முன்னம் அறியாதிருந்தனர் எனவும் கூறலாம். இவ்வீரர் கிழக்கு வங் காளத்தைச் சேர்ந்தவராக இருக்கலாம் என டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐய்யங்கார் அவர்கள் அபிப்பிராயப்படுதல் முற் றும் பொருத்தமானதேயாகும். 6

### மோரியர் படையெடுப்பு

வடுகர், கோசர் என்னும் படைவீரர் தவிர, மோரியர் படை ஒன்று தனியே இருந்தது. அப்படையில் தேர்கள் இருந்தன. எனவே, இத்தமிழகப் படையெடுப்பில் மோரியர் படை, வடுகர்படை, கோசர்படை என மூவகைப் படைகள்

---

1. நற்றிணை, 212. 2. அகம், 196.
3. ,, , 15,113, 4. புறநானூறு, 378.
5. அகநானூறு, 375.
6. Vide his 'Beginnings of South Indian History', pp. 94,59.

இருந்தன. (1) இம்மூவருள் முன்னுற வந்த கோசர் தமிழகம் தின் வடமேற்கெல்லை வழியாக நுழைந்து 'துளு' நாட்டை யடைந்தனர்; அந்நாட்டரசனை நன்னனைக் காட்டிற்கு விரட்டினர்; அவனது பட்டத்து யானையைக் கொன்றனர்; துளு நாட்டைக் கைப்பற்றினர்; நன்னனது; [1] காவல்மிகுந்த 'பாழி' என்னும் இடத்தே 'வடுகர்' தங்கி விட்டனர். [2] (2) நன்னனை வென்ற கோசர், சேரன் தானைத்தலைவனும் முதிரமலைத் தலைவனும் ஆன 'பிட்டங்கொற்றனை'த் தாக்கினர்; போர் நடந்தது. முடிபுதெரியவில்லை. [3] (3) பின்னர் 'வாட்டாறு' என்ற ஊரையும் 'செல்லூ' ரையும் ஆண்ட 'எழினி ஆதன்' என்பானைக் கோசர் தாக்கினர். அவன் செல்லூர்க்குக் கிழக்கே கோசரோடு சண்டையிட்டு, வேல் மார்பில் தைக்கப்பெற்று மாண்டிருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது. [4] (4) கோசர், சோணாடடைந்து அழுந்தூர் வேளான திதியனைத் தாக்கினர்; அதுபோது அவனைச் சேர்ந்த ஒரு வீரனது கண்ணைக் கோசர் அழித்தனர் என்பதை அவ்வீரன் மகளால் உணர்ந்த வேள், சினங்கொண்டு, போர்புரிந்து பகைவரைப் புறங்காட்டச் செய்தான். [5] (5) பின்னர் அக்கோசர் பொதியமலை அருகில் இருந்த மோகூரைத் தாக்கினர்; மோகூர் பணிந்திலது; அப்பொழுது 'வடுகர்' படையை முன்விட்டுப் பின் புதிதாகவந்த (வம்ப) பெரிய தேர்களையுடைய மோரிய வீரர் மோகூரைத் தாக்கினர்; முடிபு தெரிந்திலது. [6] இப்படையெடுப்பில் மோரியர், தம் வரவிற்குத்தடையாக இருந்த மலையைக் குடைந்தோ,வெட்டியோ வந்திருத்தல் வேண்டும் எனத்தெரிகிறது. [7] (6) இங்ஙனம்பொதியம் வரைவந்த இவ்வீரர் வடக்குநோக்கிச்செல்லுங்கால், 'இளஞ்சேட் சென்னி' என்ற சோழமன்னன், தென்பரதவரான மோகூர் மன்னன் முதலியோரை வென்ற வடவடுகரை (கோசரை) வென்றான். [8] மேலும் இவன், 'குறைவினையை முடிப்பதற்காக (அறைகுறையாகப் பகைவரைத் தோற்கடித்து அத்துடன் விடாமல் அவர்களை முற்றிலும் தோற்கடிப்பதற்காக)ப் பாழி நகரை அழித்து 'வம்பவடுகர்' (புதிதாகக் குடிபுக்க வடுகர், கோசர்) தலைகளை அறுத்து அழித்தான்' என அழகாகவும்தெளிவாகவும் அகநானூற்றுச் செய்யுள் கூறுதல் கவனிக்கத் தக்கது. இவ்வாறு 'பாழி' யை

---

1. குறுந்தொகை, 73.   2. அகநானூறு, 375.
3. புறநானூறு, 169.   4. அகநானூறு, 90, 216.
5. ,, , 251, 281.   6. அகநானூறு, 196, 262.
7. ,, , 69, 251, 281; புறம்—175.
8. ,, ; 205; புறம்—378.

வென்றகாரணம் பற்றி அச்சோழன்: 'செருப்பாழி எறிந்த இளஞ் சேட் சென்னி' எனப்பட்டான்[1]

## மோரியர் தோல்விக்குக் காரணம்:

இவ்வாறு வலிமிக்க சோழமன்னன் போர் தொடுத்து வென்றமையாற்றான், மோரியர் படை நிலைகுலைந்து தனது கருத்து நிறைவேறப்பெறாமல், தமிழகம் விட்டு மீண்டிருத்தல் வேண்டும். சோழமன்னன் எதிர்த்திராவிடின், தமிழகமும் மோரியர் ஆட்சிக்குட்பட்டிருக்கும். தமிழகத்தின் படைவலி யையும் இயற்கை அமைப்பையும் பிறவற்றையும் அறியாத வடநாட்டினர் ஆதலின், மோரியர், துளுநாட்டை முதலில் வென்று, சேரநாடு சென்று சேரர் தலைவனைத் தாக்கி, வாட்டாறு சென்று, பின்னர்ச் சோணாடடைந்து திதியனிடம் தோல்வியுற்று, பிறகு தெற்கு நோக்கிச் சென்று தாம் பெற்ற தோல்விகட்கீடாகத் தென்பரதவரை வென்றிருத்தல் வேண்டும். அவரை வென்ற மகிழ்ச்சியோடு, தாம் முன்னர்த் தோற்ற சோழநாட்டு வழியே வருகையில் சோழனால் முறியடிக்கப்பட்டு, தமக்கு முதல் வெற்றி கிடைத்த துளு நாட்டைநோக்கி ஓடியிருத்தல் வேண்டும். சோழன், அங்கும் அவரைத் துரத்திச் சென்று பாழியை அழித்து வடுகரை வென்றான். சோழனது வெற்றியால், மோரியர், 'தமிழகப் படையெடுப்புப்போதும்' எனச்சலிப்புற்றும் போயிருக்கலாம்.

இப்படையெடுப்பு, மோரியர்க்கு வெற்றியைத்தராமை யாலும், தமிழகம் சுயேச்சையாக அசோகன் காலத்தே விளங்கினமையாலும், சோழனால் அவர்கள் இறுதியாகத் தோற்கடிக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்னும் சரியான முடிபுக்கு வரவேண்டியிருக்கிறது. பெருவேந்தனான சோழன் இப் படையெடுப்பை எதிர்த்திராவிடின், தமிழகம் மோரியர் கைப் பட்டிருக்குமென்பதில் ஐயமில்லை. இப்படையெடுப்புச் சம்பந்தமாகப் பாண்டியர், சேரர் பெயர்கள் காணப்படவில்லை. இதற்கு, படையெடுத்தவர் தமிழகத்துக்கே புதியவர் ஆயினமையால், தம் மனம்போனபடி படையொடு சென்று, எதிர்ப்பட்டாரை எதிர்த்து வென்றும் தோற்றும் இறுதியிற் பயனடையாது மீண்டனர் என்னும் சமாதானம் தவிர வேறு யாதுதான் இப்போதுள்ள நிலைமையிற் கூறல் இயலும்?

## பிற்கால ஆரியர், கோசர், வடுகர்:

கோசர், வடுகர், மோரியர் சம்பந்தமான செய்யுட்களை ஒருங்கு கூட்டிப் பார்த்து நுணுகி ஆராய்பவர் மேற்காட்டப்

1. அகம்—375, புறம்—378.

பெற்ற எமது முடிபை ஒருவாறு அங்கீகரித்தல் கூடும். இப் படையெடுப்பிற் சம்பந்தம் பெறாத பிற்கால ஆரியர், கோசர், வடுகர், எனத்தமிழ்ப் பாக்களில் கூறப்பட்டவர் வேறு. கோசரையும் வடுகரையும் கொண்ட மோரியர் படை தமிழகத்துக்கு வடக்கே இருந்து வந்தது. கி. மு. 232-ல் அசோகன் இறப்ப, அவனுக்குப் பின் வடுகர் சுயாதீனம் பெற்றனர். எனவே, டெக்கான் பிரதேசம் முழுவதும் வடுகர் ஆட்சியில் இருந்தது. அப்போது தமிழகத்தின் வடக்கே வடஎல்லையில் வடுகர் படை இருந்தது. மோரியர் காலத்திய கோசர் சந்ததியார் எல்லைப்புறத்திலேயே நிலைத்து விட்டனராதல் வேண்டும். அங்ஙனம் நிலைபெற்ற அச்சந்ததியார், வடுகர், கங்கைச்சமவெளியினின்றும் வடுகர் நாட்டில் தங்கிய ஆரியர் (வடமொழியாளர்) இவர்கள் பிற்காலத்தே மலையமான், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் முதலியோரால் தாக்கப்பட்டிருத்தல் வேண்டும். என்னை? ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் காலம் சிலப்பதிகாரகாலம்; கி. பி. 150-கி. பி. 175க்குட்பட்ட காலம். [1] மோரியர் படையெடுப்பின் காலம் கி. மு. 298-கி. மு. 272-க்கு உட்பட்ட பிந்துசாரன் ஆட்சிக் காலமாகும். எனவே, சுமார் 400 ஆண்டுகட்கு முற்பட்ட வரும் பிற்பட்ட வருமான கோசர், வடுகர் வேறு வேறானவர். இக்கருத்தினைச் சிறந்த சரித்திராசிரியராகிய டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் கூறுதல் எமது முடிபுக்கரண் செய்வதாகும். [2]

இதுகாறும் கூறியவற்றால், இம்மோரியர் படையெடுப்பு என்றது மோரியர் காலத்தேதான் நடந்ததென்பதும், மோரியர் என்பார் சந்திரகுப்தன் முதலாகக் கி. மு. 185 வரை ஆண்ட தசரதன் ஈறானவரேயாவர் என்பதும், வேறெக்காரணமுங் கொண்டு குப்தரைக் குறியாதென்பதும் அறியலாம். மோகூர்ப் படையெடுப்பிற்றான் 'வம்ப மோரியர்' என்ற தொடர் ஒரே முறை வந்துள்ளது. 'கோசர்க்கு மோகூர் பணியாமையின், வம்ப (புதிய) மோரியர் துணைக்கு வந்தனர்' என்பதே அச்சந்தர்ப்பத்தில் உள்ள செய்யுளடிகளின் கருத்தாகும். முன்படைக்கு எதிர்ப்புப் பலமாக இருப்பின் அதற்குதவியாகப் புதிய (வம்ப) படை வருதல் இயல்பேயன்றோ? அதுபோலக் கோசர்க்கு மோகூர் பணியாமையின், புதிய (வம்ப) மோரியர் படை வந்தது என்பதே கருத்து. இவ் வெளிய—சர்வ சாதாரணமான பொருள் யாங்ஙனம் வேறுபட்டுக் 'குப்தரை'க் குறிப்பதென்பது எமக்கு விளங்கவில்லை.

1. Vide K. G. Sesha Iyer's 'Ceras of the Sangam Period' pp. 121, 122.

2. Vide his 'Beginnings of S. I. History', p.p. 98, 99.

யாம் சென்ற இதழிற் கூறிய இரு பேரறிஞரும் தவருகக் கொண்டு, ஒரே இடத்தில் வந்துள்ள வம்ப மோரியரைக் குப்தராக எண்ணினர் போலும்!

'வம்ப மோரியர்'—குப்தர் எனக் கொண்டால், 'வம்ப வடுகர்' என்பவர் யாவர்? 'வடவடுகர்' என்பவர் யாவர்? இவர்க்கெல்லாம் புதிய பாரம்பர்யத்தை வீணே கற்பிக்க வேண்டிய துன்பமில்லைமை ஏற்படுமே! இது நிற்க.

இம்மோரியர் படையெடுப்பு எக்காலத்த தென்பதை அடுத்த இதழில் ஆராய்வோம்.

---

# குறுந் தொகை

[வித்வான் இரா. சிவ. சாம்பசிவ சர்மா எழுதியது.]

## மருதம்

*பிரிந்துசென்ற தலைமகன் குறித்த பருவத்தின் மாலைப்பொழுதினைக்கண்டு ஆற்ருது வருந்திய தலைவி தோழிக்குச் சொல்லியது.*

மாமிலாடனுர் பாடியது

46. ஆம்பற் பூவின் சாம்ப லன்ன
கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ
முன்றி லுணங்கல் மாந்தி மன்றத்
தெருவி னுண்டாது குடைவன வாடி
இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்
புன்கண் மாலையும் புலம்பும்
இன்றுகொ ளேழியவர் சென்ற நாட்டே.

*என்பது பிரிவிடை யாற்ருளெனக் கவன்ற தோழிக்கு கிழத்தி ஆற்றுவ லென்பதுபடச் சொல்லியது.*

பதவுரை

*தோழி—தோழியே, அவர் சென்ற நாட்டே—தலைவர் சென்ற நாட்டின் கண், ஆம்பல் பூவின் சாம்பல் அன்ன—ஆம்பல் மலரின் வாடிய பழம் பூவைப்போல, கூம்பிய சிறகர்—குவிந்த சிறகினையுடைய, மனையுறை குரீஇ—மனையின்கண் வாழும் குருவிகள், முன்றில் உணங்கல் மாந்தி—வீட்டின்*

முன்னிடமாகிய முற்றத்தில் உலர்த்தப்பட்ட தானியங்களை யுண்டு, மன்றத்து—ஊர்ப் பொது நடு விடங்களில், எருவின் நுண்தாது குடைவன ஆடி—எருவிலுள்ள நுண்ணிய புழுதி களைக் குடைந்து ஆடித் திளைத்து, இல்இறைப் பள்ளித்தம் பிள்ளையோடு வதியும்—வீட்டின் இறப்பில் தம் சேக்கை யில் குஞ்சுகளுடன் வசிக்கும், புன்கண் மாலையும்—துன்பந் தரும் மாலைப்பொழுதும், புலம்பும்—தலைவரைப் பிரிதலால் உளதாகும் துயரும், இன்று கொல்—இல்லையோ? (இருப்பின் தலைவர் இவண்வாராது அவண்உறைவாரல்லர் என்க.)

சாம்பல்—பழம் பூ. சிறகர்—அர். போலி. குரீஇ—குருவி. உணங்கல்—வற்றல் : ஆகுபெயர். மாந்தல்—உண்ணல். இறை—வீட்டின் தாழ் வாரத்தினுள்ள இறப்பு. குறியிறக் குடம்பை—புறம் 129) பள்ளி—துயிலிடம், சேக்கை. கொல்—ஐயப் பொருளது, இடைச்சொல். நாட்டே—நாட் டின் கண் எனவிரிக்க.

மேற்கோள் விளக்கம்:—

சாம்பல்—பழம்பூ—" அடலையொடுங்கல் பழம்பூவிவை சாம்பல்" —பிங்கலந்தை (468)

1. 'ஆம்பற் பூவின்.........நாட்டே"—
"இது சென்ற நாட்டு இவை இன்றுகொல் என்றது" என்பதற்கு மேற்கோள். —(தொல்—கற்பி. பக். 671)

2. "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை"
என்பதற்கு மேற்கோள்—"இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளை யொடு வதியும்" என்பது. —(தொல்—மரபி. பக் 534)

3. "ஆம்பற்பூவின்.........பிள்ளையொடு வதியும்"
—"மனையுறை குரீஇக் கறையணற் சேவல்
...........................................................குடம்பைப்
பெருஞ்செய் நெல்லி னரிசி யார்ந்துதன்
புன்புறப்பெடை யொடு வதியும்" —(புறம். 318-4-8)

4. "எருவினுண்டாது குடைவன ஆடி"—
மூவிடத்து ஐம்பாலினும் வினை முற்று வினையெச்சமாயின —(நன்—சங்கா—பக். 185, சூ. 351)

5. "ஆம்பற் பூவின் சாம்பல் அன்ன"—
"மாதார் மயிலன்னவர் சண்பகச் சாம்பல்

(ஒத்தார்—சீவக. 2349)

மெய்ப்பாடு—பெருமிதம்.
பயன்—ஆற்றுமாறு அறிவித்தல்.

## தமிழ் எழுத்துக்களின் நுண்மைவிளக்கம்

[திரு. பா. வே. மாணிக்க நாய்க்கர்

திரு. க. ப. சந்தோஷம், B. A., L. T.,]

(முன் ௪௦௯-ஆம் பக்கத்தொடர்ச்சி)

*பெரியவற்றிலும் சிறியவற்றிலும், யாண்டும், இம்மொழியில் ஒழுங்கும் முறையுமே காணக்கிடக்கின்றன. க், ம், ன் முதலிய மெய்கள் எழுத்தாய் ஒலிபெறுதற்கு ஒருயிரின் துணை வேண்டப்படுகின்றது. இங்ஙனம் வேண்டப்படும் உயிர் எல்லாவிடத்தும் இகரமேயாகின்றது. இக், இம், இய் என்பவற்றால் இஃதறியப்படும். முப்பாற் புள்ளியாகிய ஆய்தவெழுத்தையு மியக்குதற்கோர் உயிர்வேண்டும். ஆனால், ஈண்டு இகரம் வருவதில்லை; அகரந் தோன்றும். ஆய்தத்தை, அஃகன்னா அல்லது அஃகேனா என்றுசொல்கின்றோம். கூர்ந்து பார்க்குந் திறனுடைய எவரையும் ஈர்க்குந் தகையதாகிய இம்முறை, தமிழ் எழுத்துக்கள் மறையியல்பற்றி வகுக்கப்பட்டன வென்பதைக் காட்டும். உண்மையியலையொட்டித் தமிழ் எழுத்துக்கள் மூன்று வகைப்படும். இம்மூன்று வகைகளும் சிவ, சக்தி, மாயா, அல்லது பதி, பசு, பாச எழுத்துக்களெனப் பெயர்பெறும். சிவ அல்லது பதி எழுத்தாவது, ஆய்தம் அல்லது தனிநிலை எனப்படும் ஃ; பசுவெழுத்துக்களாவன, உயிர் பன்னிரண்டும்; பதினெட்டு மெய்யும் பாசவெழுத்துக்களாம். இங்ஙனமிவற்றைக் கூறுசெய்வது பெருவகுப்பெனக்கொள்க. ஒவ்வொரு வகுப்பும் இங்ஙனமே முக்கூறுபடும். எங்ஙனமெனின், பதிஎழுத்தாகிய ஆய்தம், பதியிற் பதி, பதியிற் பசு, பதியிற் பாசம் என முக்கூறாகும். இந்த முக்கூறும் ஆய்தத்தின் மூன்று புள்ளிகளாற் குறிக்கப்படும். மேற்புள்ளி பதியிற்பதி, வலபாற்புள்ளி பதியிற்பசு, இடபாற்புள்ளி பதியிற்பாசம். இங்ஙனம் வகைசெய்தலின் அமைதி, ஆய்தத்தின் மூன்று புள்ளிகளும் சிவபிரானின் மூன்று கண்களுக்கு மறிகுறியாதல்கொண்டு தெளியப்படும்; முக்கண்களில் உயர்ந்து நடுவிலிருப்பது ஒளியையும், வலபாலது ஆற்றலின் ஊற்றாகிய கதிரவனையும், இடபாலது மாயை அல்லது காமியத்திற் குறைவிடமாகிய நிலவையுங் காட்டும்.*

இவ்வாறே பசு அல்லது சக்தி எழுத்துக்களாகிய பன்னிரண்டு உயிர்களும் பசுவிற் பதி, பசுவிற் பசு, பசுவிற் பாசம் என மூக்கூறுருகும். இந்த உட்பிரிவில் வரும் மூன்று எழுத்துக்களில், அகரம் பசுவிற் பதி, உகரம் பசுவிற் பசு, இகரம் பசுவிற் பாசம். இதை யகத்திற்கொண்டு எழுத்துக்களை நோக்குவோமாயின், மெய் யெழுத்துக்களை இயக்குவதற்கு இகரவுயிரும், ஆய்தத்தைத் தொடங்குவதற்கு அகரவுயிரும் வேண்டப்படுங் காரணம் நமக்கு விளங்கும். மெய்யெழுத்துக்களெல்லாம் பெருவகுப்பில் மல அல்லது பாச வெழுத்துக்கள். இவைகளை இயக்குவதற் குயிரொன்று வேண்டுமாயின், அதற்கியைந்த உயிர் இகரமேயாகும். எற்றிற்கெனின், உயிரெழுத்துக்களின் உட்பிரிவில் இகரம் பாசத்தோடு தொடர்புடையது. இதுபற்றி மெய்யெழுத்துக்கள் இக்கன்னு, இம்மன்னு, இய்யன்னு என்றோசை பெறுகின்றன. இக்காரணத்தைக்கொண்டே பதி எழுத்தாகிய ஆய்தத்தின் மூன், உயிரெழுத்துக்களிற் பதியைக் குறிக்கும் அகரம் வேண்டப்படுகின்றது. அஃகனு, அஃகேன்னு வென்பதும் இதனுலேயே. ஈண்டு நாம் காணும் ஒழுங்கைப் பின்வருமாறு தொகுத்துக்கூறல் சாலாதுகொல்?

“மும்மல வெழுத்தாம் மூவாறு மெய்யையும்
தனித்தியக்கு முயிர் இகார மென்க
தனிநிலை தானே யியங்கா தமரில்
தனித்தியக்கு முயிர் ஆகார மென்க.”

இதிலிருந்து, மொழியின் அமைப்பில் தோன்றும் வேறுசில ஒழுங்குகளைக் காணப்புகுவோம். தமிழில் அ, இ, உ என்ற மூன்று சுட்டெழுத்துக்களுளவென் றறிவோம். இவற்றுள் அகரச்சுட்டு ஆங்கிலச் சொல்லாகிய That என்பதன் பொருளது; இகரச்சுட்டு This என்பதன் பொருளது; உகரச்சுட்டு இவையிரண்டிற்கு மிடைப்பட்டது. இதன் பொருளைக் குறிக்க ஆங்கிலத்தில் தனிமொழி யொன்றுமில்லை. ஆங்கிலத்தில் That எனுஞ்சொல் அகரவுயிர்பெற்று அகலவிருக்கும் பொருளைச்சுட்டுவதும், This எனுஞ்சொல் இகரவுயிர்பெற்று அண்மையிலுள்ளதைச் சுட்டுவதும் கருதத்தக்கனவாம். (சமஸ்கிருதத்தில் அயம், இயம் என்பவற்றை நோக்குக.) சுட்டெழுத்துக்கள் மூன்றுந் தமிழ்க்கே சிறப்பாயுரியன. இவை மூன்றும் உயிரெத்துக்களின் உட்பிரிவில் பதி, பசு, பாசத்தைக் குறிக்குமெழுத்துக்களாயின. இவற்றுள் இகரஉயிர் மலவெழுத்துக்களாகிய பதினெட்டு மெய்களையும் இயக்குதற்கு வேண்டப்படுகின்றது. ஓ என்ற பிரணவத்தில்

மலவெழுத்துக்களைக் குறிப்பது மகரவொற்ருகும். ஆதலின், இகரத்தை நீக்கி மகரத்தை வைப்போமாயின், பதி, பசு, பாசத்திற் கறிகுறியாகும் பிரணவத்தின் மூன்று பகுதிகளாய அ, உ, ம், என்பவை தோன்றுகின்றன. இந்த மூன்று சுட்டுக் களின் பொருள் இவற்ருல் குறிக்கப்படும் பதி பசு, பாசத் தன்மைகளோடு ஒத்திருக்கின்றது. பதி என்பது கருத வொணுததும் அணுகவொணுததுமாய் நின்று, அகரத்தாற் குறிக்கப்படுமாறே, சுட்டகாரமும் சேய்மைப்பொருளைக் குறிக் கின்றது. பாசம், திரிமலகோசம் அல்லது உடம்பு அண்மையி லுள்ளதும், நானென்ற உணர்ச்சியொடு தவருக ஒன்றுபடக் கூடியதும், இதுவென்று சுட்டப்படக் கூடியதுமாகிய தன்மை களை யுடையது. இதற்கிசையவே உண்மையியலில் பாசத்தைக் காட்டுகின்ற இகரம், மொழிவகையில் அண்மையிலுள்ளதைச் சுட்டும் எழுத்தாகின்றது. பசு அல்லது ஜீவாத்மா அல்லது உயிர், பதி அல்லது பரமாத்வைப்போல் அறியவொணு தொன்றுமன்று; பாசம் அல்லது உடம்பைப்போல் இது வென்று சுட்டப்பட்டு எளிதில் உணரக் கூடியதுமன்று; ஆதலின், உயிர் பதியைப்போல் அவ்வளவு சேய்மையது மன்று, உடம்பைப் போல் அத்துணை அண்மையதுமன்று. இதுபற்றி அது, இது என்ற சேய்மையண்மை நிலைகளுக்கு இடைப்பட்டுநிற்பதாகிய உயிர் அல்லது ஜீவாத்மா உகரத்தால் குறிக்கப்பெறுவதாயிற்று. தமிழ்ச் சுட்டெழுத்துக்களாகிய அகர இகர உகரங்களின் பொருளை மறைப்பு வகையில் கூறுகிறேனென்று நீங்கள் நினைக்கலாகாது. எனது நோக்கமது வன்று. சுட்டெழுத்துக்களைச் சூழ்ந்த மறைப்பை நீக்கவே யான் முயல்கின்றேன். சுட்டெழுத்துக்களைப்பற்றித் தொல் காப்பியச் சூத்திரம் பின்வருமாறு:— "அ, இ, உ அம் மூன்றுஞ் சுட்டு" இதற் குரைவகுத்த இளம்பூரணனர், "குற் றெழுத்தெனப்பட்ட அம்மூன்றுஞ் சுட்டென்னுங் குறிய வென்றவாறு" என்று கூறுகிருர். நச்சிஞர்க்கினியரு மிவ் வாறே யுரைசெய்து ஒரு குறிப்புஞ் சேர்க்கின்ருர். அஃ தென்னவெனின், "இதுவும் ஆட்சியுங் காரணமும் நோக்கிய தோர்குறி, சுட்டியறிப்படும் பொருளை யுணர்த்தலின்." அறி வையும் ஆட்சியையுங் குறிப்பதற்கோ ரடையாளமாகச் சுட் டென்னும் பெயர் வந்தது. ஏனெனின், அறிவதற்குரிய பொருள்களையே சுட்டென்பது குறிக்கின்றது. இளம்பூரணரும் நச்சிஞர்க்கினியரும் கூறியவற்றை ஈண்டெடுத்துக் காட்டிப் பின்னவர் கூறிய குறிப்பிற்கோர் விளக்கமுந் தந்ததெற்றிற் கெனின், சுட்டெழுத்தென்று சொல்லப்படுவனவற்றின் பெயர்க்காரணம், மறைத்தன்மையின்பாலதென்று இவ்விரு

வுரைகாரரும் நினைத்தனரென்று காட்டுதற்கே. சுட்டு என்னும் பெயர்க்குரிய மறைத்தன்மையையும் முதன்மையையும் இலக்கணத்திலன்றி வெளியிலுங் காணலாம். "பிறராற் பெருஞ் சுட்டு வேண்டுவான்" என்பது பொதுவழக்கில் மற்றோரால் புகழப்பட விரும்புபவனைக் குறிக்கும். ஈண்டுச் சுட்டென்பது புகழ். மற்றும், பொதுவழக்கில் சுட்டுப்பொருளென்பது, வழிபடுமொருவன் தன்னுள்ளத்தி லமைத்துக்கொள்ளும் கடவுளுருவத்தைக் காட்டும்; அக்கடவுள் வழிபடுவோனின் பக்குவத்திற் கிணங்கக் குருவடிவாய்க் கட்புலனாகவாயினும் உணர்ச்சிவாயிலாகவாயினுந் தோன்றுமென்பர். இங்ஙனமே, "சுட்டுவைக்க" என்ற தொடர், புலன்களை யடக்கிக்கொண்டு வணக்கத்திற்குரிய ஒரு கடவுள் வடிவத்தை யமைக்க, என்று பொருள்படும்.

இதுகாறும் சுட்டெழுத்துக்களைப்பற்றி யாம் கூறியவற்றைப் பின்வருமாறு விளக்கியுந் தொகுத்துங் கூறலாம்:—

"சுட்டத் தகுபொருள் மூலமுப் பொருளே
அவையுட் பதிதான் அகார மாகும்
உகாரம் பசுவாம் மகார மெய்ப்பாசமாம்
மகார மெய்யை யியக்கும் இகரத்துடன்
அ, இ, உ அம்மூன்றுஞ் சுட்டே."

தமிழ்மொழியி னமைப்பிற் காணக்கிடக்கும் வியத்தகுமுறையினை மற்றோ ருதாரணத்தாற் காட்டுதும். எம்மொழியிலும் ஒற்றெழுத்தை முதலினுடைய ஒரு சொல்லை உச்சரிப்பதினும். தமிழொழிந்த பிறமொழிகளில் இத்தகைய சொற்கள் சிறந்தவற்றையும் இழிந்தவற்றையும் குறிப்பதற்குப் பெருவாரியாக வெடுத்தாளப்படுகின்றன. ஆங்கிலத்தில் Christ, Crime, Druid, Drunkard, Friar, Fret, என்ற சொற்கள் ஒற்றெழுத்தை முதலினுடையவாய்ச் சிறந்தவற்றையும் இழிந்தவற்றையுங் குறிக்கின்றன. சமஸ்கிருதத்தில் ஸ்ரீ, ஸ்ரார்த்த; க்ருபா, க்ரூர, ப்ரார்த்தன, ப்ராயஸ்சித்த ,ப்ரஹ்ம; ப்ரஷ்ட என்பவற்றைக் காண்கின்றோம். ஒற்றெழுத்தை முதலினுடையவொரு சொல்லை உச்சரிக்க முடியாதவர்களாய்த் தமிழரிருந்தார்கொல்? இல்லையெனின், "உயிர்மெய்யல்லன மொழி முதலாகா" என்ற விலக்கொணா விதியை வகுக்க அவர்களைத் தூண்டியது யாது? இவ்விதியைத் தமிழர் தம்மொழிக்கே யன்றிப் பிறமொழிக்கு மேற்றுகின்றனர். பிறமொழிகளிலிருந்து ஒற்றைமுதலினுடைய ஒரு சொல்லைக் கடன்வாங்குங்கால், அச்சொல்லைத் தமிழ்மொழியில் சேர்ப்பதற்குமுன் கழுவாய் (பிராயஸ்சித்தம்) தேடுகின்றனர். இதன்பயனாகத் தமிழில்

வந்தேறும், ஒற்றெழுத்தை முதலினுடைய சொல்லின் தலையில் ஒருயிரெழுத் தேறுகின்றது. எங்ஙனமெனின், க்ருப என்ற சமஸ்கிருத மொழி தமிழில் வரவேண்டுமாயின், கிருப அல்லது கிருபை என்று உயிரெழுத்தைத் தலையிலேற்கவேண்டும். ம்ருக என்ற சமஸ்கிருதமொழி மிருக வென்று தமிழில் வர வேண்டும். நம்மைச் சூழ்ந்துள்ள உயிர்த்திரளை நோக்குவோமாயின், செத்த உடம்பு ஒழுங்குபட்ட ஒரு தொகுதிக்கு முன்னிற்காதென்பது நமக்கு விளங்குகின்றது. தமிழிலக்கண நூலார் ஒற்றெழுத்துக்களைச் செத்தவுடம்பென்று கருதி அவைகளுக்கு உடலென்றும், இவற்றை யியக்குமெழுத்துக்களை ஆவியென்று கருதி உயிரென்றும் பெயரிட்டனர். உயிர் வகையில் நாம் காண்கின்ற முறையே மொழியிலுமிருக்கவேண்டுமென்ற கருத்தவர்களுக்கில்லாதிருப்பின், "உயிர்மெய்யல்லன மொழிமுதலாகா'' என்றவர்களிட்ட கட்டளைக்குக் காரணங் காணலரிது.

தமிழிலக்கணங்களில் முதன்மைபெற்றனவெல்லாம் பொருளிலக்கணமென்ற ஓரின்றியமையாப் பகுதியை யுடையனவாகத் திகழ்கின்றனவென்பதைப்பற்றி ஈண்டுக் கூறுதல் மிகையாகாது. பொருளிலக்கணமென்பது மக்கள் கருதுவதற்குரியனவும், அடைய முயல்வதற் குரியனவுமாகியவற்றின் இலக்கணமாம். தமிழிலக்கணங்களில் இஃது ஒரு பகுதியாயமைந்தது, பிறமொழியினின்று தமிழை ஒரு தனிநிலைக்குயர்த்துகின்றது. மக்கள் கருதுவதற் குரியனவும் அடைய முயல்வதற் குரியனவுமாகியவற்றை இலக்கணத்திலொருபகுதியாக்கியது, வாழ்க்கையின் விதிகளை மொழியின் விதிகளோடு ஒன்றுபடுத்த வேண்டுமென்ற நோக்கம் தமிழிலக்கண நூலார்க் கிருந்ததென்பதைத் தெற்றென விளக்குகின்றது. இறையனாரகப் பொருளென்ற நூல் சங்ககாலத்திலெழுதப்பட்ட பழைய நூலென்பது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதை ஆக்கியோன் சிவனே என்று நூல்வரலாறு கூறுகின்றது. எங்ஙன மிந்நூலெழுந்ததென்பதைப்பற்றிச் சங்கப் புலவரும் அதனுரைகாரருமாகிய நக்கீரர் கூறுவதை ஈண்டெடுத்துரைப்போம். "அரசனும் புடைபடக்கவன்று என்னை? எழுத்துஞ் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருளதிகாரத்தின்பொருட்டன்றே! பொருளதிகாரம் பெறேமேயெனின், இவை பெற்றும் பெற்றிலேம்' எனச் சொல்லாநிற்ப, மதுரை ஆலவாயின் அழனிறக்கடவுள் சிந்திப்பான்; 'என்ன பாவம்! அரசற்குக் கவற்சி பெரிதாயிற்று. அதுதானும் ஞானத்திடையதாகலான் யாமதனைத் தீர்க்கற்பாலம்' என்று

இவ்வறுபது சூத்திரத்தையும் செய்து, மூன்று செப்பிதழகத் தெழுதிப் பீடத்தின் கீழிட்டான்."

நக்கீரரது உரை பிற்காலத்திலெழுதிச் சேர்க்கப்பட்ட இடைச் செருகலுடையதென்று தோன்றுகின்றது. ஆயினும் மேற்கூறப்பட்ட கதை இடைச்செருகலென்று நினைக்கவிடமில்லை. வரலாற்றுசிரியர்க்கு இக்கதை பயனிலாதொழியினும், பண்டைத் தமிழர்கள் சரியாகவாதல் தவருகவாதல் வையக வாழ்க்கையின் விதிகளுக்கிணங்க மொழியமைக்கப்படவேண்டுமென்ற கொள்கையுடையரா யிருந்தனரென்பதை விளக்குவதற்கு இது மற்றோரெடுத்துக் காட்டா யிலங்குகின்றதன்றோ?

---

## சத்திரத் தலைவர்

பிராமணருள்ளே மெய்யறிவும் நல்லொழுக்கமும் உடையவர் சிலரொழிய, மற்றவர்கள், அறியாமையினாலும், பொருமையினாலும், துரபிமானத்தாலும், பிராமணரல்லாத மற்றைச் சாதியாரெல்லாரும் சமசாதியாரென்றும், கல்வியறி வொழுக்கஞ் சிறிதும் இல்லாதவர்களாயினும், தாங்களே உயர்ந்தவர்களென்றும், கல்வியறிவொழுக்கமுடையவர்களே யாயினும் மற்றைச் சாதியாரெல்லாருந் தாழ்ந்தவர்களென்றும் பேசுவது எல்லாருக்குந் தெரியுமே. அவ் வியல்புடையவர்களைச் சத்திரத்துக்கு அதிகாரிகளாக்கினால், அவர்கள் சத்திர தருமங்களை ஒழுங்காக எப்படி நடத்துவார்கள்.

ஆறுமுக நாவலர்.

---

# செய்திகளும் குறிப்புகளும்:
# News and Notes

[புதுக் கவி]

## ஆலயத் திறப்பு

அல்லது

## க்ஷேத்திரப் பிரவேசனச் சதகம்.

இசைத் தமிழ்ச் செல்வர்

[உயர் திரு. T. இலக்குமண பிள்ளை, பி. ஏ. அவர்கள் பாடியது]

நொண்டிச் சிந்து

"மந்திரமும் உதவாது—மருண்டிடும்
வையத்தில் மாந்த்ரிகள் பலர் பொய்யவிழ்க்கின்றார்
தந்திரமும் ஒன்றுமில்லை—பண்டைச்
சாணக்கன் வந்தாலும் ஓர் செம்பாணிக்குதவான். 47
மன்னனே மருத்துவனும்—இதற்கு
மருந்தவன் கைபடவே பொருந்துவதாம்
பின்னொரு வழியுமில்லை—இனிமேல்
பிறரைக் கேட்பதில் பயன் பெறுவதில்லை, 48
சஸ்த்ர ப்ரயோகம் ஒன்றே—வருத்தம்
தணிக்கும் இப்பிணிக்கு மற்றொரு மருந்தால்
சொஸ்தமுங் கிடைப்பதில்லை—என்றே
துணிதலுற்றான் மன்னன் பணிதலுற்றான். 49
"ஜனாதிகாரிகள் பண்டு—ஏழை
ஜனங்களின் சுதந்திர மனங் கெடுத்தார்
அனாதிகாலம் அவர்தம்—சுகத்தை
அறுக்கும் மனவிலங்கைத் தறிப்பன்" என்றான், 50
ஆயிரத் தொருநூற்றுக்—கப்பால்
ஆறிரண் டாண்டதில் அற்பசித் திங்கள்
கோயில்கள் திறந்துவிடப்—பணித்தான்
குணமெழுஞ் சித்திரையிற் சித்திரை வேந்தன். 51
வேந்தன திருபத்தைந்தாம்—திருநாள்
விடிய விளம்பரமும் விடிந்ததுவே
காந்தியுடன் ஜொலித்ததுவே—அதிலே
கடவுளின் திருவருள் நடமுளதால். 52

பிறப்பினுல் நம்பிக்கையினுல்—ஹிந்துமதம்
பெற்றவர்கள் எவ்வெவரும் உற்றுக்கோயில்கள்
மறுப்பின்றிப் புகுந்திடலாம்—என்று
மகாராஜன் விளம்பரம் வகை சொன்னதே. 53

ஆயிரம் வருஷவட்டத்தில்—செய்யொணு
அடிப்படைச் சீர்திருத்தம் நொடிப்பொழுதில்
சேயிருந் திப்படிச்செய்தான்—என்றே
சிந்தனை யுள்ளவரெல்லாம் வந்தனை செய்தார். 54

சுசியாய்க் கோயில் புகவே—இதற்குத்
துணைச் செயல் முறைகளை இணைத்தனனே
சசிவோத்தமன் ஸர். ஸி. பி.—ராம
ஸ்வாமி யென்பான் புகழ் மேன்மை மந்திரி. 55

ஓடக்குழற் கண்ணபிரான்—பண்டு
ஒற்றைக் குசேலன் உற்ற பசிதீர்த்தான்
கோடிக் குசேலர் தமக்குக்—கோமான்
கூடும் ஆத்ம பசிக்குறை நாடித்தவிர்த்தான். 56

பஞ்சத்தால் மிகவாடித்—தவிக்கும்
பாமர ஜனத்திணிடைக் கோமகன் சென்று
நன்சுவை நறுநெய்யுடன்—உள்ள
நாளளவும் சாப்பிடுங் கோளளித்ததுபோல், 57

திரண்டெழுங் கோடிவயல்—பாய்ந்து
தேறிடத் துளித்தண்ணீரும் ஊறிடாமல்
வறண்டிடும் பயிர்வகைகள் நன்கு
வாழ்ந்து தழைக்க முகில் தாழ்ந்ததுபோல்; 58

குடிநீரற்ற பாலை—வனத்தில்
கொடும்பசி தாகத்தால் இடும்பைப் பட்டோர்
மிடிதீர்தன் வயலும்—நிறைநீர்
வீழ்ச்சியும் காட்சியுற்ற விந்தையைப் போல். 59

“தேசமெங்கும் தலைவிரித்துத்—துள்ளிய
தீண்டாமை தொடலாமை யாண்டிடும் பேய்
நாசமுற்றுப் போயினதே” யென்று
நாடனைத்தும் களிப்புக் கொண்டாட வந்ததே. 60

ஈனவகுப்புக்கள் என்ற—பிறப்புற்ற
இழிவினையும் மதத்தின் வழுவினையும்
பேஞமுனை யோரசைப்பால்—ஒழித்த
பெருமை பொருந்து மன்னன் அருமையினைப் 61

பாட்டிலும் சிலையிலுமே—எங்கும்
பரப்பி மனிதருள்ளம் நிரப்பி நிலை
நாட்டி வழுத்திடவேண்டும்—என்று
நாட்டினர், ஹரிஜனங்கள் கூடினரே. 62

ஆனந்தக் கடல் அமிழ்ந்தார்—முன்னே
அமரர் கடைந்தெடுத்த அமிர்தமதைப்
பானஞ் செய்ததுபோலே—களித்தார்
"பகவன் அருள் பழுத்த வகையி" தென்றார். 63
"சரித்திர நிகழ்ச்சிகளில்—இதற்குச்
சமமாக மதிப்பிட அமையும் செயல்
தெரித்திடல் அரி"தென்றார்—விண்ணுலகத்
தேவர்களும் இப்பெருமை மேவரி தென்றார். 64
பற்பல சங்கங்கள் கூடினார்—ஜனங்கள்
பார்புகழ் மன்னரில் இவற்கார் நிகர்? என்றார்
"சொற்புகழ் அசோகன் மட்டுமே—விரிவுறுந்
தொல்லுலகில் இவற்கிணை சொல்லலாம்" என்றார். 65
பல்லாயிரம் ஹரிஜனங்கள்—அனந்தைப்
பட்டணத்திற் குழுமினர், திட்டப்படியே
எல்லாரும் வேந்தனைக் கண்டார்—நெஞ்சில்
எழும் நன்றியைப் பகர்ந்து தொழுது கொண்டார். 66
கோஷயாத்திரைக் காரர் எழுந்தார்—அனந்தையிற்
கோலாகல விசித்திர வேலைகள் செய்தார்
வேஷங்கள் பல புனைந்தார்—பாண
வேடிக்கைகள் மின்விளக்கு ஜோடித்தல் செய்தார். 69
பாட்டுக்கள் அனந்தம் பாடினார்—பற்பல
பஜனைக் கூட்டங்கள் புகழ் வசனஞ் சொன்னார்
ஆட்டங்கள் பல ஆடினார்—பற்பலர்
அந்தரத்தில் விளையாடி விந்தைகள் செய்தார். 68

(தொடரும்)

---

## "காட்டுக காட்டுவாயே"

[திரு. அ. சிதம்பரநாதச் செட்டியார் M. A.]

அருளுடை யரசே யிந்த
அடியனேன் உன்னைக்கண்டு
தெருளுறா தலைந்து கெட்டேன்
திக்கெலாஞ் சென்றுங் காணேன்
உருளுடைச் சகடந் தன்னில்
ஊர்ந்திடும் ஒருவனொத்தே
திருவினேய்! நினையா துன்னைத்
திருத்துவன் இல்லப் பணியே. 1

பணியெலாம் அறியேன் செய்யேன்
பகர்ந்திட ஒண்ணு விதத்தால்
அணிவது போலுஞ் செய்கை
அறிவிலேன் செய்து செல்வேன்
பணியிது செய்க என்று
பரமனீ காட்டில் அந்தோ
தணிந்துநான் இருப்பன் கொல்லோ
தாவியே எழுவன் அன்றோ. 2

ஓவியத் தெழுத ஒண்ணு
உத்தம உன்பால் அன்பு
மேவியே உன்னைக் காண
மோகமும் கொள்வன் என்னில்
ஆவியொ டாவி யாக
அமைந்தநீ அறிவாய் நன்றே
தாவிவந் தென்னை யீர்த்துத்
தந்திடு நின்னைத் தானே. 3

தானமுந் தவமுஞ் செய்யேன்
தருக்கியே செருக்கிச் செல்வேன்
ஆனையும் பாலும் உண்பேன்
அவைதமை யுனக்குத் தாரேன்
மேனியைப் பெரிதுங் காப்பேன்
மெத்தவும் உன்னைச் செப்பேன்
ஏனையா என்னைப் பாராய்
எழுந்திடு கதிரின் மிக்காய் ! 4

மிக்கது செயினும் ஐய
மிகுதியைத் தகுதி யாக்கல்
தக்கதே நினக்குத் தேர்ந்தேன்
தடையொடு சிறிதும் உண்டோ
ஒக்கவே உன்னோ டாங்கே
ஒருரு வெய்தி நிற்கும்
அக்கையும் அம்மை யான
அருளுரு தடைசெய் யாதே. 5

தடுப்பதும் உண்டே யானல்
அத்தடை யெனதே யன்றோ
விடுப்பதே குற்ற மென்று
விளம்பினை மறந்து விட்டேன்

அடுத்தடுத் தென்ன குற்றம்
அறிவிலேன் செய்யப் புக்கால்
தடுத்துநீ ஆண்டா யன்றே
தந்தைநின் தகைமை யென்னே! 6

என்னரும் ஈச நேசா
எழிலுறும் அழகே யென்னைத்
துன்னரும் பாவக் காட்டில்
துவண்டிடச் செய்தி டாதே
உன்னருங் குணங்கள் பன்னி
உன்னையே நம்பி மேலும்
என்னுடைக் கருமந் தன்னை
யேற்பவே புரியச் செய்வாய். 7

செய்வதும் செய்விப் பானும்
செம்மலோய் நீயே நாளும்
உய்வது புரிய எந்தை
உகந்ததை உணர்த்து வாயே
பொய்யது போக்கி மெய்யாம்
புகழதே யாக்கச் செய்வாய்
மெய்யதே யான மெய்யா
மேன்மையாய் ஓங்கி யுள்ளாய்! 8

உள்ளுளே விளங்கி நிற்கும்
உருவமே யுன்னை யந்தோ
பள்ளத்தின் இழியும் வெள்ளப்
பெருக்குபோல் செய்து காணேன்
கள்ளமோ கண்ணின் செய்தி
கசடனேன் அதற்கோ பெற்றேன்
தள்ளிடா தென்னைக் காப்பாய்
தாங்கியே காட்டு வாயே. 9

காட்டிடு லன்றிக் காணக்
கரியருள் ஒருவன் யானும்
காட்டுவை யென்னும் நோக்காற்
கருத்தழி யாம லுள்ளேன்
காட்டிடக் கடனுங் கொண்டாய்
காட்டெனக் கேட்பார் தமக்குக்
காட்டிடு காட்டி டென்றேன்
காட்டுக கருணை யானே. 10

**வேள்ளகால், திருவாளர் ராவ் சாஹேப் V. P. சுப்பிரமணிய முதலியார், G. B. V. C., (Retired Dy. Superintendent of the Civil Veterinary Dept.) அவர்களுக்கு 1937-ம் ஞு ஆகஸ்டு மூ 1-உ ஞாயிற்றுக்கிழமை எண்பதாம் ஆண்டு பூர்த்தியாகின்றது.**

திரு. முதலியார் அவர்கள் நம் தமிழ்நாட்டில் கல்வி, அறிவு, ஒழுக்கங்களில் சிறந்தவர்கள். பழுத்த தமிழ்ப்புலமை வாய்ந்தவர்கள். சென்ற அறுபது ஆண்டுகளாகத் தமிழ்த்தாய்க்கு அருந்தொண்டு புரிந்தவர்கள். அவர்கள் அரசாங்க உத்தியோகத்தில் அமர்ந்து பென்ஷன் பெற்றவர்களாயினும், தமிழ் நூல்களை ஆராய்வதையும் தமிழ்க் கவிகள் இயற்றுவதையும் அவகாசமாகக் கொண்டவர்கள். அவர்கள் புதிய நூல்கள் பல எழுதி, தமிழ் மொழியும், தமிழ் இலக்கியமும் அபிவிருத்தியடையும்படி செய்திருக்கிறார்கள். ஆங்கிலக் கவியான மில்டன் எழுதிய சுவர்க்க நீக்கம் (Paradise Lost) என்னும் அரிய நூலைத் தமிழில் விருத்தப்பாவில் மொழிபெயர்த்திருக்கிறார்கள். கம்பராமாயணத்திலுள்ள இனிய கவிகளைத் திரட்டி அவைகளுக்கு விளக்கவுரை முதலியன எழுதி, கம்பராமாயண சாரம் என்று புத்தக வடிவில் வெளியிட்டு, தமிழ் நாட்டிற்கும் தமிழ் மொழிக்கும் பெரியதொரு பணியியற்றி வருகிறார்கள். இன்னும் அவர்கள் நெல்லைச் சிலேடை வெண்பா, கோம்பி விருத்தம், அகலிகை வெண்பா முதலிய நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்கள்.

தமிழ் மக்களும், தமிழ் மொழிப்பற்றுள்ள மற்றவர்களும், இத் தமிழ்ப் பெரியாரின் எண்பதாவது ஆண்டு நிறைவு விழாவைக் கொண்டாடி, முதலியார் அவர்களிடம் தமக்குள்ள நன்றியறிவைப் புலப்படுத்தவும், தமிழ்த் தாய்க்கு அவர்கள் செய்துள்ள அருந்தொண்டைப் பாராட்டவும் விரும்புவார்கள் என்பது திண்ணம். ஆதலால்,. அவர்களது எண்பதாம் ஆண்டு நிறைவு விழாவைக் கீழ்க்கண்ட முறையில் நடத்த எண்ணியிருக்கிறோம்.

(i) திருநெல்வேலியில், பெரியார் ஒருவர் தலைமையில் ஒரு பொதுக் கூட்டம் கூட்டி, அக்கூட்டத்தில் முதலியார் அவர்களுக்கு ஒரு உபசாரப்பத்திரம் வாசித்துக்கொடுத்தல்.

(ii) விழாவிற்குரிய பெரியாரை நன்கு அறிந்தவர்களைக் கொண்டும், அவர்களோடு பழகியும், அவர்களது நூல்களைப் படித்தும், குணாதிசயங்களை அறிந்து அனுபவித்துமுள்ளவர்களைக் கொண்டும் கட்டுரைகள் எழுதச்செய்து அவைகளை அப்பெரியாரின் வாழ்க்கை வரலாற்றோடு எண்பதாம் ஆண்டு நிறைவு விழா மலர் ஒன்று வெளியிடுதல்.

(iii) அப்பெரியாரது பெயர், தமிழ் நாட்டில் என்றும் நின்று நிலைபெறும்படி இவ்விழாவில் வசூலிக்கும் பணத்தை, (சுமார் ரூ. 3000 வரை) ஒரு தமிழ்ப் பணிக்குச் செலவு செய்தல்.

அந்த விழாவிலே, தாங்களும் கலந்துகொள்ள விரும்புகின்ரேம். இவ்விழாச் சம்பந்தமான தங்கள் கருத்தைத் தெரிவிப்பதோடு, தங்களாலியன்ற பொருளுதவி செய்யும்படி வேண்டிக் கொள்ளுகிரேம்.

பணம் அனுப்ப விரும்புவோர், திருநெல்வேலி, தென்னிந்தியா பாங்க் ஏஜெண்ட், திருவாளர் V. S. ஆறுமுகம் பிள்ளையவர்களுக்கு அனுப்பலாம்.

இப்படிக்கு,

S. குமாரசாமி ரெட்டியார் —தலைவர்.
V. S. ஆறுமுகம் பிள்ளை —பொக்கிஷதார்.
P. ஆவுடையப்ப பிள்ளை
J. சக்கரபாணி நம்பியார் —அமைச்சர்.

---

## செந்தமிழ் மாநாடும் இந்திமொழியும்

திருச்சி ஜில்லா, கருவூரிலிருக்கும் ஈழத்துச் சிவானந்த அடிகளார் இந்திமொழியைத் தமிழ்நாட்டில் எக்காரணத்தைக் கொண்டும் புகுத்துவதற்குத் தமிழ் மக்கள் இடங்கொடுத்தலாகாதென்பது காரணமாக விரைவில் ஒரு மாநாடு கூட்ட முயற்சிசெய்து வருகின்ருர்கள். அம்மாநாடு இனிதே நடைபெறுவதற்குப் பொருளில்லாமல் முடியாது. தமிழ்ப் புலவர்களும் தமிழ்மக்களும் பொருளுதவிசெய்து அம்மாநாட்டிற் கலந்து அதனை இனிது நடைபெறச் செய்வார்களாக.

---

இந்த ஜூலைத் திங்கள் ஏழாம்நாள் இந்தியப் பேரியக்கமாகிய காங்கிரஸ் கொள்கையினர் பதவியேற்றுப் பணிசெய்ய முடிவு கட்டியமை ஒத்துழைப்பியக்கத்தின் வெற்றிக்கு அறிகுறியாகும்.

---

37. மிகைசெயுங் குறுகலர்கள் மார்பைப் பிளந்துவாய்
மிச்சமது பேசினோரை
மிகவாய்க் கிழித்துவிரு திட்டவன் னியர்தனை*
வெட்டிமேல் விருதுகட்டிப்
பகைகழுவி வந்திருகை கழுவிமனை யாள்கையில்
பகிர்போசனங் கொள்ளுவோர்
பஞ்சவிதி மந்திரக் குருபரஞ் சோதிபொற்
பாதமக லாதநேசர்
மகண்மண முகிழ்த்தமதில் மூந்நூறு முப்பது
மருகனிடு பரிசமாமன்
வார்நிரை தனிற்றடி யெறிந்துபெறு சீதன
மகளுக்களித்த புகழார்
குகையடவி மலையடைய வடையலர்க ளிட்டகற்
கோட்டைதளி கொண்டுலகில்வாட்
கோட்டையிடு கின்றபடை வீட்டவர்க ளேவைந்து
கோட்டைவள நாட்டவர்களே.

37. மிகுதியான சினத்தை யுண்டாக்கத்தக்க வரம்புகடந்த காரியங்களைச் செய்யும் பகைவர்களது மார்பைப் பிளந்து, வாய்வந்தவாறு பேசுபவர்கள் வாயை மிகவும் கிழித்து, விருதுகட்டிவந்த வன்னியர்களைக்கொன்று தாம் விருதுகட்டிப் பகைவர்க ளில்லையாகும்படி அழித்து, கைகழுவி, மனைவியர் கையாற் பகிர்ந்தூட்டப்பெற்ற உணவை யுண்போர்; ஐந்துவிதிகளை விளக்கிப் பஞ்சாட்சர மந்திரோபதேசம் செய்துவைத்த குருவான பரஞ்சோதியாரின் அழகிய பாதங்களை மறவாத அன்பினர்; மகளுக்கு மணம்செய்விக்கும் முகூர்த்தத்தில் மூந்நூற்று முப்பதுவகையான பரிசங்களை மருகனுக்கு இடுவோர்; மாமனது நிறைந்த படைகளில் வளைதடி யெறிந்துபெற்ற சீதனங்களை மகளுக்கு அளித்த புகழினை யுடையார்; குகைகளைக்கொண்ட காட்டில், மலையிடத்தடையும், பகைவர்கள் சமைத்த கற்கோட்டைகளையும் கோயில்களையும் கைப்படுத்திக்கொண்டு, உலகில் வாளாயுதத்தைக்கொண்டு கோட்டைகளைப் பிடித்துக்கொள்கிற படை வீட்டவர்களான ஐந்து கோட்டைவளநாட்டு மறவர்கள். (௩௭)

---

* தமை. *வன்னியர்—வடுகருள் ஒருவகையினர்.

38. சுடர்வா ளடற்காதல்* தசரதராம மக்கட்
டுருக்கர்தே யத்துறையுநாட்
டொழுமவர்கள் வேதமு மிவர்சமய போதமும்
துறையொத்தி டாவழுவினால்
வடநாடு விட்டரிய தென்னாட தற்கிழிவை
வளநாடு தலமாமென
வந்தபல பட்டடையு மஞ்சரசு மஞ்ஞூறு
வாளுநிலை பதியாயினோர்
படநாக சாய்கைத் துழாய்மா யனுக்குரிய
பட்சமுறு தோழமையினர்
படிமேய்த்த மாவிலெண் கிளைமக்கள் சம்மந்த
பரிபால * வங்கிச பதியோர்
குடநாடர் வடநாடர் கன்னாடர் கப்பங்
கொடுத்தடி தொழக்கண்டுவாட்
கோட்டையிடு கின்றபடை வீட்டவர்க ளாவைந்து
கோட்டைவள நாட்டவர்களே.

38. ஒளிபொருந்திய வலிமையுமுடைய வாளொடு கூடிய அன்பும் அழகும்மிக்க தசரத ராமமக்கள் துருக்கர்தேசத்தில் வசிக்கும் நாட்களில், அத்துருக்கர்தொழும் வேதமும் இவர்கள் சமயபோதமும் மார்க்கத்தில் ஒவ்வாத குற்றத்தினால், வடநாட்டைவிட்டு அரிய தென்னாடதற்கு இழிவானது என எண்ணி, வளப்பம்பொருந்திய பாண்டி வளநாடு சிறந்த தலமாம் என்று வந்த பலப் பலவான சேனைகளையும், அஞ்சரசையும், ஐந்நூறு வாளும்கொண்டு நிலைபெற்ற நகரிலுள்ளாராயினோர்; படத்தைக்கொண்ட நாகப்பாயலையுடைய துளசியையணிந்த திருமாலுக்கு அன்புமிக்க தொண்டுபூண்ட தோழராயினோர்; உலகிலுள்ளார்களைப் புரந்த, பெரிய வில்லையுடைய எண்வகைச் சுற்றத்தவர்களின் சம்பந்தத்தோடு பரிபாலனம் புரியும் வமிசத்தையுடைய பதியிலுள்ளோர்; குடநாட்டவரும், வடநாட்டவரும், கன்னட நாட்டவரும், கப்பங்கொடுத்து அடிதொழக்கண்டு வாளாயுதத்தால் கோட்டைகளைப் பிடித்துக்கொள்கிற படைவீட்டவர்களான ஐந்து கோட்டைவளநாட்டு மறவர்கள். (௩௮)

---

* 1. 'தசரத ராமமக்கள்' எனத் தோன்றுகிறது.
2. 'வங்கிஷம்' என்று பிரதியில் காணப்படுகிறது.

39. வருகின்ற தென்சாய்கை யெங்கெங்கு மொருசாரி
வாசியெழு தூசியாட
வையமெங்குந் துலுக்குக் கொண்டுதொழு தகையொடு
வாங்குபுக லோகைபொங்க
வுருவின் சுயம்புப் பிரதிட்டைதங் கத்திரு
வுருப்பொடி படுத்தி யணியி
னுயர்பணி யனைத்தையுங் கொண்டுதன் பதியினி
னுயர்பள்ளி செய்துதொழவே
திருவின்ப சிவதல மிறந்திடுதல் கண்டுபிர
திட்டைசெய வேயோகநித்
திரைவிட் டெழுந்துதிரு மங்கைமார் பனரிய
செகமீதில் வழுதிமரபிற்
குறைவின்றி வருகுறுங் குடிநம்பி யோடுருக்
கொண்டுவரு கின்றவர்கள்வாட்
கோட்டையிடு கின்றபடை வீட்டவர்க ளேவைந்து
கோட்டைவள நாட்டவர்களே.

39. வருவதான தென்திசைக்கண் எவ்வெவ்விடத்தும் ஒப்பற்ற வரிசையான குதிரைப்படைகளின் தூசியெழவும், உலகிலெங்கும் துருக்கர்களை வெற்றிகொண்டு தொழுத கையோடும் நிற்பவர்களை அடைக்கலமளிக்கும் உவகை மீக்கூர, வடிவோடுகூடிய சுயம்புவைப் பிரதிஷ்டைசெய்து தங்கத்தினால் திருவுருச்செய்து அழகுபடுத்தி, அணிபெற உயர்ந்த தொண்டுகள் பலவற்றையும் செய்துகொண்டு தம் நகரில் உயர்ந்து விளங்கும் கோயில்களமைத்துத் தொழவும், அழகு பெற்ற இன்பமயமான சிவதலங்கள் குறைவுறுதலைக்கண்டு சிவாலயங்கள் சமைத்துப் பிரதிட்டைசெய்தும், போக நித்திரைவிட்டெழுந்து திருமங்கையை மார்பிற்கொண்ட தலங்கள் விளங்கவும், அருமையான உலகமதில் பாண்டியர் மரபில், குறைவு என்பதில்லாமல் வரும் திருக்குறுங்குடி நம்பியோடு உருக்கொண்டு வருகின்றவர்கள், வாளாயுதத்தைக்கொண்டு கோட்டைகளைக் கைப்பற்றிக் காக்கின்ற படைவீட்டவர்களான ஐந்து கோட்டைவளநாட்டு மறவர்கள்.

சிவாலயங்களும், விஷ்ணு வாலயங்களும் சமைத்தமை கூறப்பட்டுள்ளது. திருக்குறுங்குடி நம்பி, திருமங்கை மன்னன் என்போர் தொடர்பு சுட்டப்பட்டுள்ளது. (ருக)

40 செம்பதும மங்கைமா டகவல்லி யுதரமிசை
தென்னன்கு லந்தழையவே
செகமீதி லரிய திருவவதார மாகத்
திருக்குறுங் குடியில்வைகு
நம்பிபிர வேசிக்கு நாளில்மெய் நொந்தமற
நன்னுதல்தனைத் தலைகீழாய்
நாற்றிட விலாவிற் பிறந்தரசு செங்கோன்மை
நானிலம் பாதிகொண்டார்
அம்புவி துலங்குசிவ விம்பம தளித்தவ
னடைந்தவட திசைதுருக்கத்
தவன்பதி யழித்தனு தினந்தொழும் பள்ளியு
மழித்தம்ப லங்கட்டிமேற்
கும்பகுடம் வைத்தசீ வலமாற னுக்குதவி
கொண்டுபகை வென்றுவடிவாட்
கோட்டையிடு கின்றபடை வீட்டவர்க ளேவைந்து
கோட்டைவள நாட்டவர்களே.

40. செந்தாமரை மலர்மாதும், பொன்னியுமான இலக்குமியின் உதரமிசை தென்னனாகிய பாண்டியன் குலம்விளங்க, உலகில் அரிய திருமாலே அவதரித்தாற்போலத்—திருக்குறுங்குடியில் வைகும் நம்பி அவதரித்த நாளில், சரீரம் வருந்திய மறவர் குலத்துதித்த பெண்ணை, தலைகீழாய் நாற்றிட, விலாவிற் பிறந்து அரசுரிமைகொண்டு செங்கோன்மை தவறாது ஆள உலகில் பாதிகொண்டனர்; அழகிய உலகம் விளங்கச் சிவபிம்பங்களை அளித்தவன் அடையப்பெற்று வடதிசைத் துருக்கர்களின் பதிகளை யழித்து, தினமும் அவர்கள் தொழும் பள்ளி வாசல்களையும் அழித்து, சபைகள் கட்டி மேலே பூரண கலசங்களான குடங்களை அமைத்த திருமாறு புல்லும் வலிமைகொண்ட பாண்டிய னுக்கு உதவியாகச்சென்று பகைவர்களை வென்று வடிக்கப்பட்ட வாளாயுதத்தால் கோட்டைகளைக் கைப்பற்றிக் காக்கின்ற படைவீட்ட வர்களான ஐந்து கோட்டைவளநாட்டு மறவர்கள். (௪௰)

மிகவுங் குறைந்தவிலைப் பதிப்பு! வெளிவந்து விட்டது!

# திருக்குறள் பரிமேலழகருரை

இதன்கண் ஆராய்ச்சி முன்னுரையும், பிற்சேர்க்கையாகத் திருக்குறட் பாயிரக்கருத்து, சில குறட்பாக்களுக்கு ஏனைய உரையாசிரியர் உரையும் விளக்கமும், அருஞ்சொற் பொருளகராதி, திருவள்ளுவ மாலை பொழிப்புரை முதலியனவும் சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

நூற்சிறப்பு உரைச்சிறப்புகட்கேற்ப இதுகாறும் திருக்குறள் பரிமேலழகர் உரைப்பதிப்பு இத்தகைய கையடக்கமான அளவில் இயன்றவரை பெரிய எழுத்துக்களில், கண் கவரும் உயர்ந்த கட்டடமுடையதாய், இவ்வளவு குறைந்த விலைக்கு யாராலும் பதித்துக் கொடுக்கப்பெறவில்லை என்பது இதனைப் பார்ப்பவர் நன்கு அறிவர்.

(1) வள்ளுவர் வண்ணப்படம் தாங்கிய பொன்னெழுத்திட்ட கலிக்காக் கட்டடமுடைய பிரதி ஒன்றுக்குக் குறைந்த விலை ரூ. 1-14
மூன்று பிரதிகளுக்குக் குறைந்த விலை ரூ. 5-0

(2) விலையுயர்ந்த ரெக்சைன் கட்டடம்: வட்டமூலை யுடையது. எட்டு விளிம்பு சிவப்புச் சாய மெருகு பெற்றது. இரண்டாந் தரப் பரிசுப்பதிப்பு பிரதி ஒன்றுக்கு விலை ரூ. 3-8

(3) விலையுயர்ந்த ரெக்சைன் கட்டடம் மடிப்பு விளிம்பும், வட்டமூலையுமுடையது. எட்டு விளிம்பு பொன்முலாம் கொண்டது. முதல்தரப் பரிசுப்பதிப்பு விலை ரூ. 4-8

கம்பராமாயண சாரம்: பாலகாண்டம்

பொழிப்புரை, குறிப்புரை, ஆராய்ச்சியுரை, கதைத் தொடர்ச்சியுடன். ஆசிரியர்: ராவ்சாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் ரூ. 2 0

ஆரணியகாண்டம் ரூ. 1 12

அயோத்தியாகாண்டம் ரூ. 1 12

கிஷ்கிந்தாகாண்டம் ரூ. 1 12

சங்க நூற் சிறுகதைகள் (அ. நடராச பிள்ளை எழுதியது) ரூ. 0 4

ஜவஹர்லால் நேரு சுயசரித்திரம் 2 பாகம் கலிக்கா ரூ. 6 0

இந்துமதத் தெய்வக் கொள்கை

இது திரு. S. கலியாணசுந்தரம் பிள்ளை அவர்களாலியற்றப்பட்டது. இதில் இந்துமதக் கடவுளைப்பற்றியும், கொள்கையைப் பற்றியும் சிலருக்கு ஏற்பட்டுள்ள ஐயங்களை நீக்கவல்ல அரிய நூலாகும். விலை ரூ. 1 0

ஆரோக்கியமும் தீர்க்காயுளும் அல்லது உணவும்
உடல் நலமும் (சுவாமி பாண்டுரங்கம் எழுதியது) ரூ. 0 4
சமயப் பொன்மொழி அட்டைகள் 15-க்கு விலை ரூ. 1 8
ஜி. யு. போப் முதலிலக்கணம் ரூ. 1 14
,, தமிழ் இங்கிலிஷ் அகராதி ரூ. 4 14
,, இங்கிலிஷ் தமிழ் அகராதி ரூ 4 14
Dr. G. U. Pope's Tamil Hand Book ரூ. 7 14

தலைமை நிலையம்: திருநெல்வேலி. } சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட். 6, பவளக்காரத்தெரு, சென்னை.

Reg. No. M. 1725 June—July 1937



---

Printed by Mr. A. Rangaswamy, at the The Progressive Printers,
Coral Merchant Street, Madras. and Published by Mr. V. Subbiah
for The S. I. S. S. W. P. Society, Tinnevelly,